தமிழ் நாட்டு

# நவீன வாசக புத்தகங்கள்

## ஐந்தாம் புத்தகம்.

---

(ஐந்தாவது வகுப்பிற்கு)




மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிடெட்.
மதராஸ், பம்பாய், கல்கத்தா, லண்டன்.

# தமிழ் நாட்டு
# நவீன வாசக புத்தகங்கள்

## ஐந்தாம் புத்தகம்

---

(ஐந்தாவது வகுப்பிற்கு)

இது
இராமநாதபுரம் ஜில்லா எடுகேஷனல் ஆபீஸரான
ஜி. தாமோதர முதலியார், பி.ஏ., எல்.டி., அவர்களாலும்
சித்தூர் சர்க்கார் சகண்டரி போதனுமுறைப் பள்ளிக்கூடத்
தலைமை ஆசிரியரான
எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., அவர்களாலும்
இயற்றப்பட்டது.



மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிடெட்.
மதராஸ், பம்பாய், கல்கத்தா, லண்டன்.
1933.



[விலை, 7 அணு




## முகவுரை.

தமிழ்நாட்டு நவீனவாசகம் என்னும் வரிசையைச் சார்ந்த இப்புத்தகங்கள், தமிழ் நாட்டிலுள்ள ஆரம்ப பாடசாலைகளிலும், நடுத்தரப் பாடசாலைகளிலும் கல்வி பயிலும் மாணவர்களுக்காக இயற்றப்பட்டவை. இப் பாடசாலைகளில் தமிழ்மொழியைக் கற்பிக்கும் நோக்கங் கள், (i) தமிழில் எழுதியுள்ள நூல்களை மாணவர்கள் சொற்பொருள் அறிந்து தாம் வாசிக்கவும், பிறர்க்கும் பொருள் விளங்கும்படி வாசித்துக் காட்டவும் அவர் களுக்குத் திறமையுண்டாக்கல், (ii) தமிழில் தெளிவாக வும் திருத்தமாகவும் பேசவும் எழுதவும் அவர்களை வல் லவராக்கல், (iii) அவர்கட்குத் தமிழ்மொழியிற் பற் றுண்டாக்கி அம்மொழியில் திகழும் அரிய நூல்களை ஆராயவேண்டுமென்னும் ஆவலை வளர்த்தல் என்பன வாம். இந்நோக்கங்கள் கைகூடுமாறு, நூதனமுறை களைத் தழுவி, இவ்வாசக புத்தகங்களை வெளியிட்டுள் ளோம்.

இத்தொடர்ப் புத்தகங்களில் விஷயமும் நடையும் படிப்படியாக உயர்ந்துகொண்டே செல்வதால், மாண வர்கள் தேர்ச்சியும் படிமுறையில் வளர்ந்து வருவதற்கு வேண்டிய வசதி அமைந்திருக்கின்றது. வாசகபாட மூலமாய்ப் பிரபஞ்ச ஞானம், தேசாபிமானம், நல்லொ ழுக்கம் முதலிய நலங்கள் சிறுவர்களுக்கு வாய்க்க வேண்டுமென்பது அறிஞர்கள் கொள்கை. இதற்கிணங்க இப்புத்தகங்கள் இயற்கைப் பொருள்களின் விவரம், அர சியல் முறை, சுகாதாரவாழ்க்கை விதிகள், பெரியார் வர லாறு, நீதிக்கதைகள் முதலியவற்றைச் சிறுவர்க்கேற்ற

வாறு கூறும் பல பாடங்களைத் தம்மகத்தே கொண்டுள்ளன. இரண்டாவது முதல் நான்காவதுவரையுள்ள புத்தகங்களில், ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும், அதில் வந்துள்ள அரிய சொற்களும், மாணவர் அறிவைக் கூர்மைப்படுத்துவதற்கு ஏற்ற வினாக்களும் குறிக்கப்பட்டுள்ளன. மூன்றாவது நான்காவது புத்தகங்களில் சுலபமான இலக்கணக் குறிப்புகளும் இணைக்கப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு புத்தகத்தின் இறுதியிலும், வகுப்புக்கேற்ற நீதிச்செய்யுட்களும், தோத்திரப் பாடல்களும் சேர்க்கப்பட்டுள.

தமிழுலகம் இவ்வாசக புத்தகங்களை ஆதரிக்குமென்னும் நம்பிக்கையுடன் இவற்றை வெளியிடுகின்றோம்.

மதராஸ்,
ஆகஸ்டு, 1933. } மாக்மில்லன் அண்டு கம்பெனியார்.

# பொருள் அட்டவணை.

முதற்பகுதி: வாசக பாடம் (Prose).

# தமிழ் நாட்டு நவீன வாசகம்

## ஐந்தாம் வாசக புத்தகம்

### 1. வாலிபச் சாரணர்

அநேக உயர்தரப் பாடசாலைகளிலும், சில ஆரம்பப் பாடசாலைகளிலும் சாரணப் படைகளிருப்பதை இப்பொழுது காணலாம். நீ ஒரு சாரணனா? உன் பாடசாலையில் சாரணப் படை ஒன்று இருக்கிறதா?

நீ ஒரு சாரணனயிருக்கப் பிரியப்படவேண்டும். சாரணர்களிடம் பல நல்ல குணங்கள் விளங்கும். அவை தெய்வபக்தி, ராஜவிசுவாசம், தேசாபிமானம், பொதுநல விருப்பம், எடுத்த வேலையைச் செய்துமுடிக்கும் ஊக்கம், சமயோசித புத்தி முதலியவைகளாகும். இவற்றை விருத்தி செய்துகொள்ள வேண்டுமென்னும் ஆவலுள்ள எந்தச் சிறுவர்களும் சாரணப் படையில் சேர்ந்தால், அவர்கள் எண்ணம் நிறைவேறும்.

சாரண இயக்கம்முதன்முதல் ஏற்பட்டபோது அதில் சிலரே சேர்ந்திருந்தார்கள். இப்பொழுது சுமார் பதினெட்டு லக்ஷம் பேர்களுக்குமேல் சேர்ந்திருக்கிறார்கள். உலகத்தில் நாகரிகமடைந்த எல்லாத் தேசங்களிலும் சாரணச் சங்கங்களிருக்கின்றன. சாரண இயக்கத்தில் சேர்ந்தவர்கள் நாட்டுவேற்றுமை, சமயவேற்றுமை, ஜாதிவேற்றுமை, நிறவேற்றுமை முதலிய வேற்றுமைகளைப் பாராட்டக் கூடாது. சாரணர் யாவரும் சகோதரர்கள் என்று எண்ணி ஒத்துழைக்கவேண்டும்.

சாரண இயக்கத்திற்கு மூலபுருஷர் ஸர் ராபர்ட் பேடன் பவல் என்னும் ஆங்கில தளகர்த்தர். அவரே உலகிலுள்ள சாரணச் சங்கங்களுக்கெல்லாம் தலைவர். சிறுவர்களிற் பெரும்பாலாரிடம் அன்பு, தைரியம், சாகஸம், விடாமுயற்சி, மனோதிடம், நல்லபிமானம், வினைசெய் திறமை முதலியவை பெரும்பாலும் மங்கி இருக்கும். இவைகளை வெளிப்படுத்த வேண்டியே இவ்வித இயக்கத்தைப் பவல் ஏற்படுத்தினர்.

ஒவ்வொரு சாரணப்படைக்கும் ஓர் ஆசிரியரும், ஓர் உதவியாசிரியரும் இருப்பர். அவர்கள் தம் படையைச் சார்ந்த சாரணர்களிடம் மடங்கியிருக்கும் நலங்கள் விருத்தியடையக்கூடிய வழிகளையும் வேலைகளையும் நாள்தோறும் கற்பிப்பார்கள். சாரணன் ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் குறைந்தது ஒரு பரோபகாரச் செயலாவது செய்வதாகத் தீர்மானித்துக்கொண்டு, அப்படியே அதனைச் செய்துவருவான். சாரணர் மேற்கொள்ளும் காரியங்களில் முக்கியமானவை, ஆபத்தில் அகப்பட்டோருக்கும் எளியோருக்கும் உதவிபுரிதல், கிராம நன்மைக்குரிய பொது வேலைகளைச் செய்தல், தம் பள்ளிக்கூடத்தைச் சிறப்பித்தல் முதலியனவாம்.

சாரணர்கள் மூன்று வகைப்படுவர்: அவர்கள் ஓநாய்க்குட்டிகள் (உல்ப் கப்), சாரணர் (ஸ்கௌட்), தேச சஞ்சாரிகள் (ரோவர்ஸ்) என்போராவர். பதினொரு வயதுக்குட்பட்டவர்கள் ஓநாய்க்குட்டி வகுப்பினர் ஆவர். அதற்குமேல் பதினறு வயதுக்குட்பட்டவர்கள் சாரணர்கள் எனப்படுவர். பதினறு வயதுக்கு மேற்பட்டவர்

களுக்குத் தேச சஞ்சாரிகள் என்று பெயர். இவர்கள் யாவருக்கும் கொள்கை ஒன்றுதான். ஆண்டவனிடத்தும் அரசனிடத்தும் அன்புடையவராய், பொது ஜனங்களுக்கும் தாய்நாட்டிற்கும் தங்களா லியன்றவரை உதவிபுரிவதே இவர்களது முக்கிய நோக்கம். ஆனால், அவரவர்கள் வயது, அனுபவம் முதலியவைகளுக்குத் தகுந்தபடி மேன்மேலும் பெரிய சேவைகளைப் புரிவார்கள்.

ஆறு சாரணர்களுக்குக் குறையாமலும், எட்டு பேர்களுக்கு மேற்படாமலும் உள்ள ஒருபடைக்கு "பெட்ரோல்" என்று பெயர். இவ்விதமான பெட்ரோல்கள் பல சேர்ந்தால் ஒரு "துருப்பு" ஆகும். சாதாரணமாய்ச் சிறிய பாடசாலைகளில் ஒன்று அல்லது இரண்டு பெட்ரோல்களும், பெரிய பாடசாலைகளில் துருப்புகளும் இருக்கும்.

அருஞ்சொற்கள்.—பொதுநல விருப்பம், ஊக்கம், ஆவல், சங்கம், சாகஸம், நல்லபிமானம், வினைசெய் திறமை, மடங்கி, மேற்கொள், கொள்கை, நோக்கம், அனுபவம்.



## 2. தாம்பிரபரணியும் குற்றால நீர்வீழ்ச்சியும்

தாம்பிரபரணி ஆறானது மேற்குத்தொடர்ச்சி மலையில் தோன்றி, திருநெல்வேலி ஜில்லா வழியாய் ஓடிக் கீழ்க்கடலை அடைகிறது. இது மிக நீண்ட நதியா யில்லாவிட்டாலும், அதிக உபயோகமானது. வருஷம் முழுதும் இதில் நீர் ஓடிக்கொண்டிருக்கும். இத்தண்ணீர் பற்பல சிறு கால்வாய்களின் மூலமாய் வயல்களுக்குப்போய்ப் பாய்கிறது. இந்நதியின் நீரில் தாமிரம் என்னும் உலோகம் கலந்திருக்கிறது என்று சொல்லுகிறார்



[*By permission of Messrs. Klein & Peyerl.*]
தாம்பிரபரணியும் குற்றால நீர்வீழ்ச்சியும்.

கள். அதனால்தான் இந்த நதிக்கு இப்பெயர் வந்திருக்கக்கூடும்.

தாம்பிரபரணியை இந்துக்கள் ஒரு புண்ணிய நதியாகக் கொண்டாடுகிறார்கள். விசேஷ தினங்களில் இந்நதியில் பலர் வந்து நீராடுவதைக் காணலாம். இதன் நீர் உடல் நலத்திற்கு மிகவும் ஏற்றது. இந்நதி உற்பத்தியாகும் இடத்திற்கருகில் ஓர் அழகான நீர்வீழ்ச்சி இருக்கிறது. அங்கேயும் பலர் நீராடச் செல்லுகிறார்கள். அதற்குப் பாணதீர்த்தம் என்று பெயர்.

தாம்பிரபரணி ஆற்றின் கரையில் பாபநாசம், அம்பா சமுத்திரம், திருநெல்வேலி, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி முதலிய தலங்கள் இருக்கின்றன.

இந்நதியில் பல சிறிய உபநதிகள் வந்து கலக்கின்றன. அவைகளில் ஒன்று மேற்குத்தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி வந்து, குற்றாலம் என்னுமிடத்தில் நீர்வீழ்ச்சியாக விழுகிறது: மலர் சொரிவதுபோல் ஓயாமல் நீர்விழுகின்ற காட்சியும், அங்குச் சுற்றிலுமுள்ள இயற்கையின் தோற்றமும், ஆகாயத்தில் சூரியனை மறைக்கும் மேகங்களின் சஞ்சாரமும் பார்க்கப்பார்க்க ஆனந்தமாயிருக்கும். இந்நீர்வீழ்ச்சியில் ஸ்நானஞ்செய்ய வெயில் காலத்தில் அநேகர் வருவார்கள். இதில் ஸ்நானம் செய்வதால் சரீரத்திற்கு மிகுந்த ஆரோக்கியம் உண்டாகிறது. இந்த இடத்தின் சீதோஷ்ண நிலைமையும் உடல் நலத்திற்குப் பெரிதும் ஏற்றதாயுள்ளது. ஆகையினால், வெகு தூரத்திலிருந்தும் ஆண்டுதோறும் கோடையில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் குற்றாலத்திற்கு வருகிறார்கள்.

இந்த நீர்வீழ்ச்சிக்கு அருகே திருக்குற்றால நாதர் கோயில் என்னும் சிறந்த ஒரு சிவாலய மிருக்கிறது. அருவியில் நீராடினதும், இவ்வால யத்தில் எழுந்தருளியிருக்கும் ஈசுவரனைத் தொழு வது பெரும் புண்ணியம் என்பார்கள்.

இங்குள்ள குன்றுகளில் ஏறிச் செல்லச் சிறிய பாதைகள் ஆங்காங்குள்ளன. இப்பிரதேசம் பார்ப்பதற்கு மிக்க அழகாயிருக்கும். இவ்வியற் கைக் காட்சியைக் கண்டதும், மனதில் எவ்வளவு கவலை யிருந்தாலும் மாறிவிடும். மேலும், இக்குற் றால மலையில் பல மூலிகைகள் நிறைந்திருப்ப தால், நாம் அதைச் சுற்றி உலாவும்போது அதி லிருந்து வரும் காற்று நம்மேல் வீசி ஆரோக்கி யத்தைக் கொடுக்கும்.

திருக்குற்றாலம், தென்காசி என்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கு மூன்றரை மைல் தூரத்திலிருக் கிறது. அதற்குச் செல்லும் பாதையின் இருபக் கங்களிலும் உயர்ந்த மரங்கள் உச்சியில் செறிந்து மிக அழகாக விளங்கும். இயற்கை யழகு மிகுந்த இந்தத் தலத்தை நீங்கள் ஒருமுறையேனும் பார்ப் பது நலம்.

அருஞ்சொற்கள்:—ஆரோக்கியம், உற்பத்தி, உபநதி, சீதோஷ்ணம், ஆண்டு, மூலிகை, இயற்கைக் காட்சி, செறிந்து.



## 3. கோலார் தங்கச் சுரங்கம்

பொன் ஓர் உலோகம் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அது மிகவும் உயர்ந்த உலோகம். ஏனெனில் அது துருப்பிடிப்பதில்லை. காய்ச்சக் காய்ச்ச அதன் ஒளி அதிகமாகும்.



[*By permission of Messrs. Barton Son & Co., Bangalore.*]

கோலார் தங்கச் சுரங்கம்.

கலப்பில்லாத பொன்னுக்குத் தங்கம் என்று பெயர்.

பொன்னை நாம் பலவகைகளில் உபயோகிக்கிறோம். நம் நாட்டவர்க்கு ஆபரணங்களின்மீது விருப்பம் அதிகம். சாதாரணமாய் இந்திய மாதர்கள் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு பொன்னுபரணமாவது அணிந்திருப்பார்கள். அரசாங்கத்தார் தங்கத்துடன் சிறிது செம்பு சேர்த்து நாணயங்கள் செய்கிறார்கள். பொன் நாணயம் நம் நாட்டில் வழங்குகிறதா? நீ எப்போதாவது அதனைப் பார்த்திருக்கிறாயா? நம் நாட்டு வைத்தியர்கள் தங்கத்தை உயர்ந்த ஒரு பஸ்பமாக்கி மருந்தாய்க் கொடுக்கிறார்கள். இந்தத் தங்கபஸ்பம் பல வியாதிகளுக்குக் கைகண்ட மருந்தாயிருக்கிறது.

தங்கம் சுரங்கங்களிலிருந்து எடுக்கப்படுகிறது. இந்தியாவில் கிடைக்கும் தங்கம் உலகத்தில் கிடைக்கும் தங்கத்தின் அளவில் சிறிது பாகமேயாகும். ஆனால், மைசூர் இராஜ்ஜியத்திலுள்ள கோலார் என்னுமிடத்தில் இது மிகுதியாய் அகப்படுகிறது. இதை வெட்டியெடுக்கும் வேலையை அவ்வரசாங்கத்தார் ஓர் ஆங்கிலேய கம்பெனியாரிடம் விட்டிருக்கிறார்கள். அகப்படும் தங்கத்தில் இவ்வளவு பாகம் அரசாங்கத்தாருக்குச் சொந்தம் என்று ஏற்பாடு செய்து கொண்டு, அவ்விதமே கம்பெனியார் கொடுத்து வருகிறார்கள்.

கோலார் என்னுமிடம் பெங்களூரிலிருந்து நாற்பது மைல் தூரத்திலிருக்கிறது. இங்கே ஐந்து சுரங்கங்கள் வெட்டப்பட்டுள்ளன. அவை

களிலிருந்து தங்கம் எடுக்கப்படுகிறது. இங்கே இவ்வுலோகம் இருப்பது வெகுகாலத்துக்கு முன்பே தெரிந்திருந்தது. மேல்தரையில் அகப்படும் தங்கத்தைப் பலர் எடுத்துச் சுத்தம் செய்து வந்தார்கள். ஆனால், இந்த ஆங்கிலேய கம்பெனியார் வந்துதான் பெரிய சுரங்கங்களை வெட்டத் தலைப்பட்டார்கள். தங்கமும் மிகுதியாகக் கிடைக்கலாயிற்று.

இவ்வுலோகம் பூமியிலிருந்து வெட்டி யெடுக்கப்படும்போது, நாம் உபயோகிக்கும் தங்கத்தைப் போலிராது: மண், கல் முதலிய பல பொருள்களுடன் சேர்ந்து கட்டியாக இருக்கும். கம்பெனியார் அக்கட்டிகளை உருக்கிச் சில மருந்துகளுடன் சேர்த்துச் சுத்தஞ்செய்து, செங்கற்களைப்போன்ற கட்டிகளாக வார்த்து, இங்கிலாந்துக்கு அனுப்புகிறார்கள். அவை இங்கிலாந்தில் மீண்டும் சுத்தம் செய்யப்படுகின்றன. இப்படிச் சுத்தமடைந்த தங்கமே, பிறகு நாணயம் அச்சிடவும் நகைகள் செய்யவும் பயன்படுகிறது.

இச்சுரங்கங்களில் மின்சாரசக்தியினால் வேலை நடைபெறுகின்றது. இந்த மின்சார சக்தி மைசூர் அரசாங்கத்திற்குச் சொந்தமான சிவசமுத்திர யந்திரசாலையிலிருந்து வருகிறது. இதனாலும் மைசூர் அரசாங்கத்திற்கு வருமானம் கிடைக்கிறது. தவிர, அவசரகாலங்களில் மின்சாரசக்தி உண்டாக்கிக் கொள்ளும்பொருட்டு ஒரு யந்திர சாலை கோலாரிலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

கோலார் சுரங்கத்தில் சுமார் முப்பதினாயிரம் ஜனங்கள் வேலைசெய்கிறார்கள். சுரங்கவேலை மிகவும் ஒழுங்காய் நடைபெற்று வருகிறது. ஓரி

டத்தில், சுரங்கத்தின் ஆழம் பூமிமட்டத்திலிருந்து ஐயாயிரம் அடிக்குக் கீழும் போயிருக்கிறது. சுரங்கங்களில் பலவேறு யந்திரசாலைகள் அமைக்கப் பட்டிருக்கின்றன. நீங்கள் பெரியவர்களான பிறகு, இச்சுரங்கங்களை நேரில் காண்பீர்களானால் வியப்படைவீர்கள்.

அருஞ்சொற்கள்:—தரு, ஒளி, மாதர், ஆபரணம், விருப்பம், பஸ்பம், கைகண்ட, சுரங்கம், தலைப்பட்டார்கள், வார்த்து, மீண்டும், வியப்பு.



## 4. நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை

நாம் தினந்தோறும் சர்க்கரையை உபயோகிக்கிறோம். சர்க்கரையில் அஸ்கா, பழுப்பு சீனி, பூரா முதலிய பலவகைகளுண்டு. சர்க்கரை எதிலிருந்து எடுக்கப்படுகிறது என்றும், எப்படிச்செய்யப்படுகிறது என்றும் நாம் தெரிந்துகொள்வோம்.

நமது தேசத்தில், பலவிடங்களில், சர்க்கரை கருப்பஞ்சாற்றிலிருந்து செய்யப்படுகிறது. இதை ஏராளமாய்ச் செய்வதற்கு யந்திரசாலைகள் அவசியம். அவ்வித யந்திரசாலை ஒன்று, தமிழ் நாட்டில் தென் ஆற்காடு ஜில்லாவைச்சார்ந்த நெல்லிக்குப்பத்தில் இருக்கிறது.

இந்தச் சர்க்கரை யந்திரசாலை சென்னப்பட்டினத்திலுள்ள பாரி அண்டு கம்பெனியாரால் நடத்தப்பட்டுவருகிறது. இதைச் சுற்றிப் பார்க்க விரும்புவோர் கம்பெனியாரிடமிருந்து உத்தரவு பெற்றுக்கொண்டு செல்லவேண்டும். இவ்வுத்தரவு எளிதில் பெறக்கூடியதாகும். உங்களுக்கு ஒழிவு நாள் கிடைத்தபோது போய் இவ் வியந்திரசாலை

யைப் பார்வையிடுவது நல்லது. இதில் பலர் வேலைசெய்து பிழைக்கிறார்கள்.



[By permission of the Harvey Engineering Co., Ltd., Glasgow (Now Blair's Ltd., Sugar Engineers, Glasgow:)]

சர்க்கரை செய்யும் யந்திரசாலை.

கரும்பை நீங்கள் எல்லோரும் பார்த்திருக்கலாம். அதன் சாறு மிக்க இனிமையா யிருக்கும். பெரும்பாலும் கருப்பஞ்சாற்றிலிருந்தே சர்க்கரை செய்கிறார்கள். பெரிய உருளைகளுக்கிடையே முதலில் கருப்பந்துண்டுகளைக் கொடுத்து, சாற்றைப் பிழிந்துகொண்டு, அதை இரும்பினால் செய்யப்பட்ட வாயகன்ற பெரிய பாத்திரங்களில் வார்த்துக் காய்ச்சுவார்கள். சாறு இறுகினதும், வெல்லமாகவும், பழுப்புச் சர்க்கரையாகவும் மாறும். பிறகு அதை மறுபடியும் நீரில் கரைத்து வடிகட்டிக் காய்ச்சினால், கொஞ்சம் சுத்தமடையும்.

எலும்புத்தூள் முதலிய துரிசெடுக்கும்பொருள்களைக்கொண்டு மேன்மேலும் சர்க்கரை நீரைச் சுத்தம் செய்வார்கள். அசுத்தங்களெல்லாம்

அறவே நீங்கினதும், சர்க்கரை சுத்த வெண்மை நிறம் அடையும். இதை யெடுத்து உலர்த்திச் சாக்குகளில் கட்டி விற்பனைக்கு அனுப்புவார்கள்.

நம் நாட்டில் வருஷம் முழுவதும் கரும்பு அகப்படுவதில்லை. ஆகையால், அது அகப் படாத காலத்தில், பனைவெல்லத்தைக் கரைத்துக் காய்ச்சி முன்போலவே சுத்தம்செய்து சர்க்கரை செய்வார்கள். வெளி நாடுகளில் பீட் என்னும் ஒருவகைக் கிழங்கிலிருந்து சர்க்கரை செய்யப்படு கிறது.

நெல்லிக்குப்பம் யந்திரசாலையில் சர்க்கரை மாத்திரமே யல்லாமல் மற்றுஞ் சில பொருள்களும் செய்யப்படுகின்றன. சர்க்கரை காய்ச்சும்போது சாற்றை வடிகட்டுகிறார்களல்லவா? அப்போது கிடைக்கும் சுத்த சாறு சர்க்கரை செய்ய உபயோ கப்படுகிறது. மேலாகத் தேங்கிநிற்கும் குழம்பு, சாராயம் காய்ச்சப் பயன்படுகிறது. மேலும், கரியமிலவாயு என்னும் 'கார்பன் டையாக்ஸை' டும் சேகரிக்கப்படுகிறது. இது சோடா முதலி யன செய்ய உதவுகிறது.

அருஞ்சொற்கள்:—வகை, சாறு, ஏராளமாய், ஒழிவு நாள், இறகின தும், துரிசு, அறவே.



## 5. தாயுமானவர்

தஞ்சாவூர் ஜில்லாவில், கடற்கரையோரத்தில், திருமறைக்காடு அல்லது வேதாரணியம் என்று பெயர்பெற்ற ஒரு பழைய ஊர் இருக்கிறது. இது ஒரு புண்ணிய க்ஷேத்திரம். இங்குக் கோயில் கொண்டுள்ள சிவபெருமானை வேதங்களே ஆதி



தாயுமானவர்

காலத்தில் பூசைசெய்தன என்பர். சைவசமயா சாரியர்கள் இத்தலத்தைக் குறித்துப் பல தேவா ரப் பதிகங்கள் பாடியிருக்கின்றனர்.

இங்கே சுமார் இருநூறு வருஷங்களுக்குமுன் கேடிலியப்பப்பிள்ளை என்ற சைவ வேளாளர் ஒருவர் இருந்தார். அவர் கல்வி கேள்விகளிலும், நல்லொழுக்கத்திலும், தெய்வபக்தியிலும் சிறந்த வர். அவர் திருமறைக்காட்டுச் சிவாலய காரியங் களைச் செவ்வனே நடத்திவந்தார்.

கேடிலியப்பப்பிள்ளையின் அரிய நல்லொழுக்கத்தையும், புத்திநுட்பத்தையும் கேள்வியுற்ற அந்நாட்டரசன் அவரைத் தனது சம்பிரதியாக்கிக் கொண்டான். அவரும் அத்தொழிலை யேற்றுத் தம் கடமையைத் திறமையாய் நடத்திவந்தார். வெகுநாட்களாகப் பிள்ளையின்றி வருந்திய தம் தமையனுருக்கு, அவர் தமது மூதற் புதல்வராகிய சிவசிதம்பரம் பிள்ளையைச் சுவீகாரமாகக் கொடுத்துவிட்டார்.

பின்பு வெகுநாட்களாகக் கேடிலியப்பருக்குப் புத்திரப் பேறுண்டாகவில்லை. அக்குறை நீங்க, அவரும் அவர் மனைவியாரும் திருச்சிராப்பள்ளிக்குன்றைக் கோயிலாகக் கொண்டுள்ள தாயுமானேசுரரை மெய்யன்புடன் தொழுதுவந்தார்கள். சிறிதுநாட்களில் அவர்களுக்கு அக்கடவுள் அருளால் ஓர் ஆண்பிள்ளை பிறந்தது. தாயுமானஸ்வாமியின் அருளால் கிடைத்த அக்குழந்தைக்குத் தாயுமானவன் என்ற பெயரே இடப்பட்டது.

இளமைதொட்டே இக்குழந்தை தெய்வபக்தியில் சிறந்து விளங்கிற்று. தகுந்த வயதில் தாயுமானவருக்கு வித்தியாரம்பம்செய்விக்கப்பட்டது. அவர் விரைவில் வடமொழி தென்மொழி நூல்களில் வல்லவரானார். கல்விக்கேற்ற நற்குண நற்செய்கைகளும் அவரிடம் விளங்கின. பதினாறு வயது நிரம்புவதற்குள், அவருக்குக் கடவுளைக் காணவேண்டும் என்னும் அவா மேலிட்டது. அது நிறைவேறுதற்கு உதவக்கூடிய ஞானாசிரியர் எப்போது கிடைப்பார் என்று எதிர்பார்த்திருந்தார்.

இச்சமயத்தில் கேடிலியப்பர் சிவபதம் அடைந்துவிட்டார். தாயுமானவர் திரண்ட செல்வத்துக்கு அதிகாரியானார். மன்னனும், இவரே இவர் தந்தைக்குச் சமானமானவர் என்று மதித்துச் சம்பிரதி வேலையைத் தாயுமானவருக்கே அளித்தான். தாயுமானவர் அவ்வுத்தியோகக் கடமைகளைக் குறைவறச் செய்துவந்த போதிலும், கடவுளை நேரே காணவேண்டும் என்னும் விருப்பம் அவரிடம் குன்றவில்லை.

இப்படியிருக்கையில், அவர் ஒருநாள் தாயுமானேசுரர் கோயிலில், ஒரு பெரியவர் கையில் ஒரு சுவடியோடிருக்கக் கண்டார். கண்டவளவில், இவர் அநுபூதியுள்ள மகான் என்று தாயுமானர் உணர்ந்து இவரை விடாதுபற்றி, சாஸ்திர உபதேசம் பெற்றார். சில நாள் சென்றபின் மன்னன் காலமடையவே, அவன் மனைவி அரசு செய்யலானாள். அவள் தாயுமானவர்மீது ஆசைகொண்டு தன் கருத்தை வெளியிட்டாள். தாயுமானவர் அவள்மயக்கம் நீங்க, உயர்ந்த நீதிகளை உரைத்து, நல்லறிவு பிறக்கச் செய்துவிட்டு, அங்கு நில்லாமல் இராமநாதபுரம்சென்றார். அங்கு அவருடைய தமையனாரான சிவசிதம்பரம்பிள்ளை அவரைப் பெரிதும் வற்புறுத்தி, அவருக்கு மணம் முடித்து வைத்தார். சிறிது காலங்கழித்து, அவருக்கு ஓர் ஆண்குழந்தையும் பிறந்தது. அக்குழந்தைக்கு அவர் கனகசபாபதி என்று பெயரிட்டார்.

புத்திரப்பேறுண்டாகிய சிறிது காலத்திற்கெல்லாம், தாயுமானவர் மனைவியார் காலகதியடைந்தார். அச்சமயம் அவருடைய ஞானகுரு மீண்டும் எழுந்தருளி, ஞானோபதேசஞ் செய்து நீங்கி

னர். பின்பு, தாயுமானர் துறவியாகித் தனியிடஞ் சேர்ந்து நிஷ்டையில் அமர்ந்தார்.

நிஷ்டை கலைந்து சஞ்சரித்த வேளைகளில், கடவுளை நினைந்து பல அருமையான தமிழ்ப் பாடல்கள் பாடினர். அவை பெரும்பாலும் ஓதற்கு எளிதாகவும், இனிதாகவும் இருக்கும். அவை பக்திரசம் மிகுந்தவை; கேட்டவர் மனத்தைச்சுத்தஞ்செய்யும் தன்மையுடையவை. மெய்ஞ் ஞானத்தைத் தர வல்லவை. அவர் பாடல்களில் ஏதேனுமொன்றையாவது அறியாத தமிழர் இருப்பது அரிது.

தாயுமானர் இவ்வண்ணம் ஞானதானம் செய்து விளங்கிப் பரமனடி சேர்ந்தார்.

அருஞ்சொற்கள்:—சமயாசாரியர், பதிகம், செவ்வனே, அரிய, நுட்பம், சம்பிரதி, புதல்வர், சுவீகாரம், புத்திரப்பேறு, இளமை, வல்லவர், அவா, அதிகாரி, அநுபூதி, உரைத்து, காலகதி, துறவி, நிஷ்டை, ரசம், ஞானதானம், பரமன், அடிசேர்ந்தார்.



## 6. புதுச்சேரி

புதுச்சேரி என்பது சென்னைக்கு நூறுமைல் தெற்கேயுள்ள ஓர் அழகான பட்டினம். இது சமுத்திரக்கரையி லிருக்கிறது. நீங்கள் எல்லோ ரும் இதைப் போய்ப் பார்ப்பது நலம்.

நமது நாடு ஆங்கிலேயரால் ஆளப்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியும். தென்னிந்தியா வில், திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை, மைசூர் முதலிய சுதேச இராஜ்ஜியங்கள் தவிர மற்றப் பாகங்கள் யாவும் பிரிட்டிஷாருக்குச் சொந்தமானவையாகும். ஆனல் காரைக்கால்

புதுச்சேரி, ஏனும், மாஹி என்னும் பட்டணங்கள் மாத்திரம் அவர்களுக்குச் சொந்தமல்ல. இவை பிரெஞ்சுக்காரர் ஆளுகைக்குட்பட்டவை.

நமது தேசத்தில் இந்த நான்கு பட்டணங்கள் தவிர இன்னும் சில இடங்களும் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமாயிருக்கின்றன. இந்தியாவிலுள்ள பிரெஞ்சு ஸெட்டில்மெண்டுகளுக்குப் புதுச்சேரியே தலைநகர். இங்கேதான் பிரெஞ்சு துரைத்தனத்துக்குரிய கச்சேரிகளெல்லாம் உள்ளன. கவர்னர் முதலிய உத்தியோகஸ்தர்களும் இங்கேயே இருக்கிறார்கள்.

நமது தேசத்து ஆட்சிமுறைக்கும் பிரெஞ்சு ஆட்சிமுறைக்கும் வேறுபாடு என்ன? உங்களுக்குத் தெரியுமா? நம்மை ஆளுவோர் நமது சக்கரவர்த்தி. அவர் லண்டன் மாநகரத்திலிருக்கிறார். அவருக்குப் பிரதிநிதிகளாக இங்கே வைசிராய், கவர்னர் முதலியவர்கள் இருக்கிறார்கள். பிரெஞ்சு துரைத்தன முறையிலோ அரசரே கிடையாது. பொது ஜனங்களே தங்களில் சிலரைத் தேர்ந்தெடுத்து ஒரு சபை அமைத்துக்கொள்கிறார்கள். அந்தச் சபையே தேசத்தை ஆளுகிறது. இவ்விதமான துரைத்தனத்துக்குக் "குடியரசு" என்று பெயர். பிரெஞ்சுக் குடியரசின் சபைக்கு "சேம்பர் ஆவ் டெபுடீஸ்" என்று பெயர். இந்தச் சபையில், பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான பிறநாட்டுப் பகுதிகளைப்பற்றிக் கவனிக்க ஓர் உத்தியோகஸ்தர் இருக்கிறார். அவருக்குக் காலனி மினிஸ்டர் என்று பெயர். பிரெஞ்சு துரைத்தன சபையின் பிரதிநிதியாகப் புதுச்சேரியில் ஒரு கவர்னர் இருக்கிறார்.

இந்தக் கவர்னர்தான் இந்திய பிரெஞ்சு நாடுகளுக்குத் தலைவர். இவர் பாரிஸ் அதிகாரிகளின் உத்தரவுப்படியே காரியங்களை நடத்திவருவார். இவருக்குஉதவியாக இங்கே சட்ட நிருபணசபை ஒன்று உண்டு. அதற்குப் பிரேஞ்சு இந்தியா அஸெம்பிளி என்று பெயர். இந்தச் சபை முக்கியமாய் உள்நாட்டுக்கு வேண்டிய சட்டங்களை ஏற்படுத்திக்கொள்ளவும், சுகாதாரம் முதலிய பொது நன்மைக்குரிய விஷயங்களைக் கவனிக்கவும் அதிகாரம் பெற்றது. இந்தச் சபையின் அங்கத்தினர்கள் யாவரும் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே யாவர்.

புதுச்சேரி நகரம் பார்ப்பதற்கு மிக்க அழகானது. இதன் தெருக்கள் நீளமாயும் ஒழுங்காயும் இருக்கும். கடைவீதிகளும், பொதுக்கட்டடங்களும் வெகு அந்தமாய் அமைந்துள்ளன. நகரம் இருபாகமாயுள்ளது. ஐரோப்பியர்கள் சமுத்திரக்கரையோரமாயுள்ள பாகங்களில் வசிக்கிறார்கள். மற்றப் பகுதிகளில் இந்தியர்கள் வாழ்கிறார்கள். விழுப்புரத்திலிருந்து ரயில் வழியாய்ப் புதுச்சேரிக்குப் போகலாம். கூடலூரிலிருந்து மோட்டார்வண்டிகள் வரக்கூடிய நல்ல சாலையும் இருக்கிறது.

இப்பட்டணத்தில் முக்கியமாய்ப் பார்க்கத்தக்கவை டியூப்ளே சிலை, கப்பல் துறைமுகம், கலங்கரை விளக்கம், கவர்னர் அரண்மனை, மைதானம், சிங்காரத்தோட்டம், பஞ்சாலை என்பவை. இவற்றைத் தவிர, பார்க்கத்தகுந்த மற்றொன்று முள்ளது: அது ஆர்டீஷியன் கிணறு என்னப்படும். ஆர்டீஷியன் கிணறு என்றால்



[*By permission of Messrs Klein & Peyerl.*]

டியூப்ளே சிலை.

என்னவென்று கேட்பீர்களே. ஓரிடத்தில் தரை ஆழமாகத் துளைக்கப்பட்டிருக்கிறது; அதில் ஓர் இரும்புக்குழா புதைக்கப்பட்டிருக்கிறது. அக்குழாயின் வழியே நீர் குபுகுபுவென்று வெளி வந்து பாய்கிறது. இவ்விதக் கிணற்றுக்குத்தான் ஆர்டீஷியன் கிணறு என்று பெயர். இக்கிணறு தோண்டப்பட்டு எத்தனையோ வருஷங்களாகியும், இன்னும் வற்றாமல் இதிலிருந்து நீர் பெருகிக் கொண்டே இருக்கிறது.

அருஞ்சொற்கள்:—ஆளுகை, தலைநகர், வேறுபாடு, குடியரசு, நிரூபணம், தேர்ந்தெடுக்கப்பட்டவர், அந்தம், சிலை, கலங்கரை விளக்கம்.



## 7. ஆயுர்வேதம்

துரைத்தனத்தார் நமது நாட்டின் பல பாகங்களிலும் வைத்தியசாலைகளைக் கட்டி, நோயாளிகளுக்குத் தகுந்த சிகிச்சைபண்ணும்படி ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இவ்வைத்திய சாலைகளில் ஜாதி சமய வேற்றுமைகள் பாராட்டப் படுவதில்லை; உதவியை நாடிவரும் எல்லா நோயாளிகளுக்கும் மருந்தளிக்கப்படுகிறது. இவைகளில் மேல்நாட்டு மருத்துவ முறைகளை நன்றாய்க் கற்றுத்தேர்ந்த வைத்தியர்களே பெரும் பாலும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

இப்பொழுது சிலகாலமாகத் துரைத்தனத்தார் ஆயுர்வேத முறையிலும் கவனம் செலுத்தி,, ஓர் ஆயுர்வேத வைத்திய கலாசாலையையும் ஏற் படுத்தி யிருக்கிறார்கள். நம் நாட்டுக் கனவான் கள் சிலர் பல வருஷங்களாகவே ஆங்காங்குத்

தம் சொந்தச் செலவில் ஆயுர்வேத கலாசாலை களை யேற்படுத்தி இம்முறையைப் பாதுகாத்து வந்தார்கள். இப்பொழுது தாலூக்கா போர் டார்கள், ஜில்லா போர்டார்கள் எனப்படும் நாட் டாண்மைக் கழகத்தார்கள் ஆயுர்வேத வைத் தியசாலைகளை வைத்து நடத்திவருகிறார்கள்.

ஆயுர்வேதம் என்றால் என்ன? மனிதரது ஆயுளைப்பற்றிச் சொல்லும் சாஸ்திரமே ஆயுர் வேதம் என்னப்படும். நமது நாட்டில் வெகுகாலத் துக்கு முந்தியே மருத்துவத்தில் மிகக் கைதேர்ந் தவர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் மனி தரது சரீர தத்துவத்தை நன்றாய்க் கவனித்து ஆராய்ந்து, சிறந்த மருத்துவ முறைகளைக் கண்டு பிடித்தார்கள். இவ்வாறு நன்றாய் ஆராய்ச்சி செய்து, மருத்துவ நூல்களை முறையாய் எழுதி வைத்தவர்களில் முதன்மையானவர் தன்வந்திரி. சரகர் என்பவரும் ஒரு சிறந்த வைத்திய நூலை இயற்றியுள்ளார்.

இவர்களைத் தவிர, அகஸ்தியர், தேரையர், புலிப்பாணி, போகர் முதலிய தமிழ்நாட்டுச் சித் தர்கள் பலரும் அரிய பல மருத்துவ நூல்கள் அருளிச்செய்திருக்கிறார்கள். அவர்கள் வெளி யிட்டுள்ள முறைக்குச் சித்தமுறை என்று பெயர். இதுவும் வியக்கத்தக்கதொரு சிறந்தமுறை. இது இன்றளவும் தமிழ்நாட்டில் ஆட்சியிலிருந்துவரு கிறது.

மேற்சொன்ன வைத்திய நூல்களில் யாவர்க் கும் பயன்தரக்கூடிய நூல்களை இயன்றமட்டில் பலரும் கற்றறிந்து கையாண்டுவருவது நல்லது. ஆயுர்வேதம், வியாதி வந்தபிறகு சிகிச்சைசெய்யும்

விதத்தைச் சொல்வதுடன், வியாதிகள் அணுகாமல் தடுத்துக்கொள்ளக்கூடிய வழிகளையும் கூறுகிறது. நோய்க்கிடங்கொடுத்து வைத்தியம் செய்து கொள்வதைவிட, நோய் வராமலே தடுத்துக் கொள்வது மேலல்லவா?

அருஞ்சொற்கள்:—சிகிச்சை, சமயம், வேற்றுமை, பாராட்டுவது, மருத்துவம், பாதுகாத்து, நாட்டாண்மை, கழகம், கைதேர்ந்தவர், தத்துவம், முதன்மை, இயற்று, சித்தர், சித்தமுறை, வியக்கத்தக்க, ஆட்சி, இயன்றமட்டில்.



## 8. தாரிட்ட கற்சாலைகள்

பிள்ளைகளே, நீங்கள் ஜனங்கள் நடந்துசெல்லும் பாதைகளைப் பார்த்திருப்பீர்கள். இவைகளிற் சில சிறியவையாயும், சில பெரியவையாயுமிருக்கும். இருபுறமும் மரங்கள் செறிந்த பாதைக்குச் சாலை என்று பெயர். சில சாலைகள், தம்மீது பரப்பிய சிறு கற்களின்மேல் கப்பிகள் கொட்டிக் கெட்டி செய்யப்பெற்று, நன்றாயிருக்கும். பாதைகள் நன்றாயிருந்தால், ஜனங்களும், வண்டிகளும் சௌகரியமாய்ச் செல்லக்கூடும். ஆகையால் பாதைகளை ஒழுங்காய் வைத்திருத்தல் அவசியம்.

நீங்கள் எப்போதாவது பெரிய பட்டணங்களுக்குச் சென்றதுண்டா? அப்படிச் சென்றிருந்தால், அங்குள்ள பெருவழிகளில் என்ன விசேஷம் கண்டீர்கள்? பட்டணங்களில் வண்டிகளின் நடமாட்டம் அதிகம். அதனால் அப்பாதைகள் அடிக்கடிச் சிதைவடையும். அப்படிக் கெடாமல் காப்பாற்றுவதற்காக அச்சாலைகளுக்குத் தாரிடப்படுகின்றது. இப்படிச் சாலைகளை ஒழுங்காய்

வைத்திருப்பது நகரபரிபாலன சபைகளின் கடமை. தாரிடுவதனுல் பெரும்பொருள் செலவாகும். ஆனல், சாலையை அடிக்கடி பழுது பார்க்கவேண்டிய அவசியம் ஏற்படாது.

தாரிடுவது எப்படி? சாலைகளில் சிறு கற்களை மட்டமாய்ப் பரப்பி, அவற்றின்மீது செம்மண்ணை இலேசாகக் கொட்டி, பெரிய உருளைகள் உள்ள வண்டிகளைக் கொண்டு கெட்டியாக்கவேண்டும். பிறகு, தார் எண்ணெயை உருக்கிக் கற்பரப்பின் மீது சமமாய் ஊற்றவேண்டும். இந்தத்தார் உலர்ந்ததும் கற்றுண்டுகளைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொள்ளும். இப்படித் தாரிட்ட சாலைகளில் மோட்டார், பைஸிகில் முதலிய ரப்பர் பூணுள்ள வண்டிகள் வெகு சுலபமாய்ச் செல்லும்.

இச்சாலைகளில் அதிகமாய் மேடுபள்ளங்கள் இராவாகையால், மழைக்காலத்தில் நீர்த்தேக்கம், சேறு முதலியவைகள் ஏற்படா. மற்றக் காலங்களில் புழுதியும் உண்டாகாது. ஆகையால், தாரிடுதல் வழக்கத்தில் இருந்துவருகிறது.

ஆனல், சாலைகட்குத் தாரிடுவதில் ஓர் அசௌகரியமும் உண்டு: கோடைக்காலங்களில் கால்நடையாய்ச் செல்லுவோர்க்குக் கால் மிகச் சுடும். ஆகையால், இவர்கள் நடந்துசெல்வதற்காகச் சாலையின் இருபுறங்களிலும் சிறிது பாகம் தாரிடாது விடப்பட்டிருக்கும். அப்பாதையில் அவர்கள் செல்வது நலம்.

நீங்கள் பெரிய பட்டணங்களுக்குப் போயிருந்தால், அங்கே பல சாலைகள் கூடும் சந்திகளின் நடுவில் ஒரு போலீஸ் சேவகன் நின்றுகொண்டு



இப்படியும் அப்படியும் கைஜாடை காட்டுவதைக் கண்டிருக்கலாம். அவன் ஏன் அப்படிச் செய்கிறான்? பட்டணங்களில் வண்டிகள் நடமாட்டம் அதிகமென்று சொன்னோமல்லவா? சாலைகள் கூடுமிடத்தில் எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஒரே காலத்தில் வண்டிகள் வரக்கூடும். அப்படி வந்தால் அவைகள் ஒன்றின்மேல் ஒன்று மோதிக் கொள்ளாவா? இதைத் தடுப்பதற்காகவே அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தன் அங்கு நின்றுகொண்டு அவை ஒழுங்காய்ச் செல்லும்படி கைஜாடை காட்டுகிறான்.

அவன் நிற்குமிடத்திலிருந்து, நான்கு திசைகளினின்றும் வரும் வண்டிகளைக் கவனிக்க முடியும். ஒரு பக்கத்திலிருந்து வரும் வண்டிகளை நிறுத்தி, மற்ற வண்டிகளை அவன் போகவிடுவான். பிறகு, நிறுத்தின வண்டிகளை விடுவான். போலீஸ் உத்தியோகஸ்தன் கையைத் தூக்கி, நிறுத்தென்னும்

குறிப்பைக் காட்டிவிட்டால், அரசருடைய வண்டியாலுங்கூட நின்றுவிடவேண்டும். அப்படிப்பட்ட ஏற்பாடு இருப்பதால்தான் யாவரும் அபாயமில்லாமல் செல்கின்றனர்.

அருஞ்சொற்கள்:—சௌகரியமாய், சிதைவு, பரிபாலனம், கடமை, மட்டமாய், கற்பரப்பு, பூண், திசை, குறிப்பு, அபாயம்.



## 9. கண்ணப்ப நாயனர்

திருப்பதிக்கு அருகில், வெகு காலத்துக்கு முன்பு, ஒரு பிரதேசம் பெருங்காடடர்ந்ததா யிருந்தது. அதற்குப் பொத்தப்பி நாடு என்று பெயர். அதன் தலைநகர் உடுப்பூர். அவ்வூரில் வேடர்கள் தலைவனை நாகன் என்பவன் வசித்துவந்தான். அவனது மனைவியின் பெயர் தத்தை. இவ்விருவரும் தம் குடிகள்மீது மிக்க அன்புகொண்டு, அவர்களைத் தம் மக்கள்போலவே ஆதரித்துவந்தனர். நாகன் பெரும் சிறப்புடன் வாழ்ந்துவந்தும், பிள்ளை இல்லை என்னும் குறை ஒன்று அவனை மிக வருத்திவந்தது. அதுபற்றி அவன் குறிஞ்சிநிலக் கடவுளாகிய முருகவேளை நாள்தோறும் தொழுதுவந்தான்.

அக்கடவுள் அருளால் அவனுக்குச் சிலநாட்களில் ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அப்போது நாகனுக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. குடிகளும் மிக மகிழ்ந்தனர். நாகன் அக்குழந்தைக்குத் திண்ணன் என்று பெயரிட்டான். குழந்தை நாளுக்குநாள் அழகிலும், அறிவிலும், ஆண்மையிலும் சிறந்து விளங்கியது. பிள்ளைப்பருவமடைந்த பிறகு, திண்ணனர் தம்மையொத்த சிறு

வர்களுடன் வனத்துக்குச் சென்று விளையாடிவந்தார்.

நாகன் திண்ணனருக்குச் சரியான வயதில் வேடர்களுக்கு வேண்டிய வித்தைகளைக் கற்பித்தான். திண்ணனரும் அவைகளில் அதி சமர்த்தராயினர். அதனோடு, தைரியத்திலும், பராக்கிரமத்திலும், தோற்றத்திலும் நாளுக்குநாள் மேம்பட்டு விளங்கினர். நாகன் தன் வயோதிகத்தையும் தனயனது தகுதியையும் கண்டு, தன் அதிகாரத்தைத் திண்ணனருக்குக் கொடுத்தான்.

திண்ணனர் ஒருநாள் வேட்டைக் கோலங்கொண்டு வனஞ்சென்று வேட்டையாடினர். நெடுநேரம் வேட்டையாடி, கடைசியில் தப்பியோடின ஒரு பன்றியைத் துரத்திக்கொண்டு வெகுதூரம் சென்று, அதைக் கொன்றார். அங்குப் பொன்முகலி ஆற்றைக் கண்டு, நீர் பருகிக் களைப்பு நீங்கினர்.

அப்பொழுது அவருக்கு எதிரே காளத்திமலை தென்பட்டது. அதனைக் கண்டு அவர் வியப்படைந்தார். அருகிலிருந்த நாணன் என்ற நல் வேடன், அம்மலை உச்சியில் குடுமித்தேவர் இருக்கிறார் என்றும், போனல் கும்பிடலாம் என்றும் கூறினன். உடனே திண்ணனர் நாணனைத் துணையாகக் கொண்டு மலைமீதேறினர். அங்கே ஒரு சிவலிங்கமிருந்தது. அதைக் கண்டதும் அவருக்கு அளவில்லாத அன்பும் ஆனந்தமும் பொங்கின. சிவலிங்கம் அவருக்குச் சிலையாகத் தோன்றவில்லை; சிவனுகவே தோன்றியது. குடுமித்தேவர் உணவின்றி அங்குத் தனியே இருக்கிறாரே என்றெண்ணிப் பதைத்துருகினர்.

நாணன் ஒருகாலத்தில் இம்மலைக்கு வந்திருந்தபோது, ஒரு பிராமணர் குடுமித்தேவருக்குப் பூசை செய்துகொண்டிருக்கக் கண்டான். அம்முறையைத்தான் கண்ட அளவு திண்ணனுருக்குக் கூறினன். அதைக்கேட்ட திண்ணனர், அந்தச் செய்கைகளே காளத்தியப்பருக்குப் பிரீதியான செயல்களாகும் என்று உணர்ந்து, அவ்வாறே தாமும் செய்ய எண்ணினர். மலையினின்றும் அவர் கீழிறங்கிவந்து, ஆற்று நீரை வாயிலும், தேன் கலந்த பன்றி இறைச்சிகொண்ட தொன்னையைக் கையிலும், மலர்களைத் தலையிலும் கொண்டு, மலைமீதேறிக் குடுமித்தேவரைப்பூசித்து, தமது அன்பின் வலிமையால் மாமிசத்தையும் அவருக்கு ஊட்டினர். பின்பு, அந்நாள் முழுவதும் அங்கே தங்கி, அவருக்குக் காவல்புரிந்து, மறுநாட் காலையில் வேட்டையாடச் சென்றார்.

இச்சமயத்தில், சிவபெருமானுக்குத் தினந்தோறும் பூசைசெய்துவந்த சிவகோசரியார் என்பவர் அங்கு வந்தார். அவர் சுவாமியின் திருமுன் எலும்புத்துண்டுகள் நிறைந்திருக்கக்கண்டு, மனம் நடுங்கி, கோயிலைச் சுத்தம்செய்து, வழக்கப்போல் பூசைமுடித்துப் போனர். திண்ணனரும் பிறகு வந்து வழக்கப்படியே தம் பூசையை நடத்தினர். இவ்விதம் ஐந்துநாட்கள் சென்றன. மனவருத்தம் மிகுந்து கலங்கும் சிவகோசரியார் கனவில் சிவபெருமான் தோன்றி, மறுநாட்காலையில் கோவிலருகில் மறைந்திருந்து, அங்கு நிகழும் செய்திகளைக் கவனிக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டார்.

சிவகோசரியாரும் அப்படியே மறைந்திருந்தார். திண்ணனர் அங்கு வந்து, தம் வழக்கப்படி

பூசைபுரிந்தார். அச்சமயத்தில் சிவபெருமான் வலது கண்ணிலிருந்து உதிரம் பெருகியது. இதைக் கண்ட திண்ணனார் திடுக்குற்று வருந்திப் பலவித மூலிகைகளைக் கொண்டுவந்து பிழிந்து குணப்படுத்த முயன்றார். ஒன்றாலும் முடியவில்லை. பின்பு தம்முடைய கண்ணை அம்பினால் எடுத்து அப்பினால் இரத்தம் நிற்கும் என்று நிச்சயித்து, தம் வலக்கண்ணைப் பெயர்த்துச் சிவபெருமான் கண்மீது அப்பினார். இரத்தம் நின்றுவிட்டது. திண்ணனார் பெருமகிழ்ச்சியடைந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் இடது கண்ணிலிருந்தும் இரத்தம் வரத் தொடங்கியது. திண்ணனார் அதுகண்டு, தம் இடது கண்ணையும் பிடுங்கி அப்ப யத்தனித்தார். அவருக்கு இரண்டு கண்களும் போய்விடும்போது, குடுமித்தேவர் கண் இருக்குமிடத்தை அவரறிந்துகொள்ள முடியாதல்லவா? ஆகையால், அடையாளத்திற்காக அவர் ஒரு காலைப் புண்பட்ட கண்ணின் அருகிலே ஊன்றிக்கொண்டு, நமது இடது கண்ணைத் தோண்ட அம்பை ஊன்றினார். கருணைக்கடலாகிய கடவுள் அதைச் சகிக்க முடியாதவராய், அவரது கையைப் பிடித்துக்கொண்டு, "நில்லு, கண்ணப்ப! நில்லு, கண்ணப்ப!! என் அன்புடைத் தோன்றல்! நில்லு, கண்ணப்ப!!!" என்று கூறித் தமது திருக்கரத்தினால் அவரது கையைப் பிடித்துக்கொண்டார். பின்பு, அவரை நோக்கி, "அன்பனே! நீ நமக்கு வலப்பக்கத்தில் என்றும் தங்கியிருப்பாயாக" என்று அருள்புரிந்தார்.

கண்ணை இடந்து அப்பியதினால் திண்ணனாருக்குக் கண்ணப்பர் என்றபெயர் வழங்கலாயிற்று. யாவற்றையும் மறைந்து பார்த்துக்கொண்டிருந்த

சிவகோசரியார் கண்ணப்பரது அன்பையும், சிவபெருமானது அருளையும் போற்றித் துதித்தார்.

"பக்திவலையிற் படுவோன் காண்க".

அருஞ்சொற்கள்:—பிரதேசம், அடர்ந்த, குறிஞ்சி, ஆண்மை, அதிசமர்த்தர், வயோதிகம், தனயன், தகுதி, கோலம், வியப்பு, வலிமை, திருமுன், உதிரம், தோன்றல், கருணைக்கடல், இடந்து, திருக்கரம்.

## 10. திராவிட நாடுகள்

### பாகம் (1)

உபாத்தியாயர்: பிள்ளைகளே, இன்று நீங்கள் உங்களுடைய நாடு, தாய்மொழி, நடவடிக்கை முதலியவைகளைப்பற்றி உங்களுக்குத் தெரிந்த வரையில் சொல்லுங்கள், கேட்போம். இந்த வகுப்பில் தமிழன், தெலுங்கன், மலையாளி, கன்னடியன் முதலிய யாவரும் இருக்கிறார்கள். சப்பந்தா, முதலில் நீ உன் நாட்டைப்பற்றித் தெரிந்த வரையில் சொல், பார்ப்போம்.

சம்பந்தன்: ஆசிரியரே, எனது நாடு தமிழ் நாடு; ஊர் தஞ்சாவூர். என் தகப்பனார் சென்னையில் உத்தியோகம் செய்வதால், நான் இங்கே படிக்கிறேன். எங்கள் நாடு நீர்வள நிலவளம் பொருந்தியது. நல்ல காற்றும் சூரிய வெப்பமும் மிகுந்தது. தானியங்கள் அங்கு நன்றாய் விளையும். நல்ல பழவகைகளும் ஏராளமாய்க் கிடைக்கும். எங்கள் நாட்டினர் வெகுகாலத்திற்கு முன்பிருந்தே அன்னிய நாட்டாருடன் கப்பல் வியாபாரம் செய்து வந்திருக்கிறார்கள். தமிழ்நாடு நாக

ரிகத்திலும் மிகுந்தது. முடிமன்னர்கள் ஆண்டது.

எங்கள் நாட்டின் பெரும் பகுதியில் தானியங்கள் வெகு சுலபமாய் விளையும். ஜனங்களுக்கு அதிக வேலை கிடையாது. ஆகையால், அவர்கள் ஒழிவு நேரத்தை வீண்போக்காமல் கல்வி கற்பதிலும், சிற்பம் சித்திரம் பயிலுவதிலும் உபயோகிப்பார்கள். என்றுமுள்ள எங்கள் தமிழ் நிகரற்ற ஒரு தனிமொழி. இம்மொழியில் எண்ணிறந்த இலக்கியங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரிய புராணம் முதலிய பெருநூல்களெல்லாம் தமிழிலுள்ளவை யல்லவா? வடமொழியிலுள்ள இராமாயண மகாபாரதங்களைப்போல் தமிழிலும் கம்பராமாயணம், வில்லிபுத்தூரார் பாரதம் முதலிய நூல்கள் இருக்கின்றன.

எங்கள் நாட்டாருக்குத் தெய்வபக்தி அதிகம். பல நாயன்மார்களும் ஆழ்வார்களும் அவதரித்த நாடு எங்கள் நாடாகும். தவிர, எங்கள் நாட்டில் எத்தனையோ புண்ணிய க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. மிகச் சிறந்த தலங்களாய்க் கொண்டாடப்படும் இராமேசுவரம், மதுரை, திருச்செந்தூர், ஸ்ரீரங்கம், திருவாரூர், சிதம்பரம், காஞ்சீபுரம், பழனி முதலியவைகளும் எங்கள் நாட்டிலேதான் இருக்கின்றன. எங்கள் நாட்டுத் திருக்கோயில்களில் உற்சவாதிகள் மிகச் சிறப்பாய் நடைபெறுகின்றன. தமிழ் நாட்டின் பெருமை அளவிட முடியாதது.

உபாத்தியாயர்: நல்லது, நீ சொல்லியவை யாவும் உண்மையே. ராமுடு, நீ இப்போது உன்

நாட்டைப்பற்றித் தெரிந்ததைச் சொல், பார்ப்போம்.

ராமுடு: ஐயா, எனது நாடு தெலுங்கு நாடு. எங்கள் நாட்டு ஜனங்கள் தேகபலமும் மனோதிடமும் பொருந்தியவர்கள்; சிநேகபாத்திரமானவர்கள். எடுத்த காரியத்தை அவர்கள் முடிக்காமல் விடமாட்டார்கள். எங்கள் நாடும் நல்ல வளம் பொருந்தியது. பெரிய நதிகளாகிய கோதாவரியும் கிருஷ்ணவும் பாய்வதால் மிக்க செழிப்புடையது. எங்கள் நாட்டில் நெல்கழனிகளும், தென்னந்தோப்புகளும், பல விருக்ஷங்களும் மிகுந்துள்ளன. மழை குறைவான பாகங்களில்கூட, பருத்தி, சோளம், கம்பு முதலியவைகள் பயிராகின்றன. கால்நடைகள் அதிகமாதலால், பால், தயிர், நெய் முதலியவற்றிற்குக் குறைவில்லை.

எங்கள் நாட்டிலும் மிகச் சிறந்த கவிகள் இருந்திருக்கிறார்கள். வேமன்ன, நன்னயபட்டர், எறப்ரகட, திக்கன்ன முதலிய கவிகளை அறியாதவர் யார்? எங்கள் பாஷையோ, மிகச் சிறந்த தாய்க் கொண்டாடப்படும் வடமொழியை ஒத்தது. எங்கள் நாட்டில் பிரபலமான இராஜ்ஜியங்கள் முன் இருந்தன. கலிங்கம், விஜயநகரம் முதலிய இராஜ்ஜியங்களும் எங்கள் நாட்டைச் சேர்ந்தவையே. ஆந்திரர்கள் பெருங் கீர்த்தி பெற்றவர்கள். தெற்கே மதுரைவரையில் சென்று அரசாண்ட திருமலைநாயகர் முதலிய நாயக அரசர்கள் எங்கள் நாட்டிலிருந்து சென்றவர்களே.

எங்கள் நாட்டில் கோயில்கள் மிகப் பலவாய் இல்லாவிட்டாலும், பிரசித்திபெற்ற திருப்பதி, காளஹஸ்தி, பத்ராசலம், ஸ்ரீசைலம், சிம்மாசலம்

முதலிய தலங்கள் அதற்குப் பெருமை தருகின்றன.

அருஞ்சொற்கள்:—பயில், நிகரற்றது, எண்ணிறந்த, இலக்கியம், அவதரித்த, புண்ணிய க்ஷேத்திரம், மனோதிடம், சிநேகபாத்திரம், கால்நடைகள், கவிகள், பிரபலம்.



## 11. திராவிட நாடுகள்—II

உபாத்தியாயர்: பிள்ளைகளே, நேற்றையதினம் சம்பந்தனும், ராமுடுவும் தமிழ், தெலுங்கு நாடுகளைப்பற்றிச் சொன்னார்கள். அவர்கள் சொல்லிய யாவும் உண்மையே. அவை வெகு நன்றாகவு மிருந்தன. இன்று வேறு நாடுகளைப்பற்றிச் சிறிது கேட்போம். அச்சுதா, உங்கள் நாடாகிய மலையாளத்தைப்பற்றிச் சொல், பார்ப்போம்.

அச்சுதன்: ஆசிரியரே, எங்கள் நாடு மேற்குக் கடற்கரையோரத் துள்ளது. இந்தியாவின் மற்றப் பாகத்திலிருந்து, உயர்ந்த மேற்குத்தொடர்ச்சி மலைகளால் அது பிரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் எங்கள் பாஷை, நடையுடைபாவனைகள் முதலிய யாவும் மாறுபட்டிருக்கின்றன. எங்கள் நாட்டில் மழையும் வெய்யிலும் அதிகம். மேலும், பூமி அங்கு சமமாயிராமல் மேடுபள்ளமாயிருக்கிறது. இக்காரணங்கள் பற்றியே எங்கள் நாட்டில் தனித்தனி இல்லங்கள் மிகுதியா யிருக்கின்றன.

வீடுகள் விசாலமாயும், வயல்களுக்கும் தோட்டங்களுக்கும் மத்தியில் தனித்தனியாயு மிருக்கும். ஜனநெருக்கம் அதிகமாயிராது. ஒவ்வொரு வீட்

டினரும் தத்தமக்கு வேண்டிய காய், கறி, கிழங்கு, மிளகு முதலியவற்றைத் தம்தம் வீட்டுத் தோட்டங்களிலேயே பயிரிட்டுக்கொள்வார்கள். எங்கள் நாடு முழுதும் தென்னை, வாழை, பலா முதலிய மரங்கள் நிறைந்திருப்பதால், அது பார்ப்பதற்கு வெகு ரம்மியமாயிருக்கும்.

தேசம் முழுதும் மலைகள் நிறைந்திருப்பதாலும், ஜனங்கள் கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டியிருப்பதாலும், எங்கள் நாட்டினர் தேகபலம் பொருந்தியவர்களாயிருக்கிறார்கள். எங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் சிலவே. எங்கள் நாட்டினரெல்லாரும் தினந்தோறும் நன்றாய்த் தேய்த்துக் குளிக்கும் வழக்கமுடையவர்கள். ஆகையால், அவர்கள் சுத்தமாயும் பார்வைக்கு அழகாயுமிருப்பார்கள்.

எங்கள் நாட்டு வைத்தியர்களுக்கு மலையிலுள்ள மூலிகைகளைப்பற்றி நன்றாய்த் தெரியும். அவர்கள் மிகுந்த சமர்த்தர்கள். பாம்பு முதலிய விஷப்பிராணிகள் எங்கள் நாட்டில் மிகுதியாதலால், அவற்றின் விஷத்தைப் போக்கக்கூடிய மந்திரவாதிகளும் விசேஷம். மிளகு, ஏலக்காய், இலவங்கம் முதலிய வாசனைத் திரவியங்கள் எங்கள் மலைநாடுகளில் ஏராளமாய் உண்டு. இவ் வாசனைத் திரவியங்களை வாங்கும்பொருட்டே மேல்நாட்டார் முதன்முதல் இங்கு வரத் தொடங்கினார்கள். இப்படி மலையாள நாடும் பெருமையுடையது.

உபாத்தியாயர்: சரி, கிருஷ்ணய்யா, நீ இப்போது கன்னட நாட்டைப்பற்றிச் சொல்லு.

கிருஷ்ணய்யா: சுவாமி, எங்கள் நாடு மலை செறிந்த நாடு. குளிர் மிகுந்தது. அங்கு பழ வர்க்கங்கள் செழுமையாய்ப் பயிராகும். நீண்ட பெரிய நதிகள் இல்லாமற்போனாலும், உள்ளவற்றில் அரசாங்கத்தார் அங்கங்கே அணைகள் கட்டிப் பெரிய ஏரிகளில் நீரைத் தேக்கி வைத்திருக்கிறார்கள். கிருஷ்ணராஜ ஸாகரம் என்பது ஒரு விந்தையான ஜலாசயம். சிவசமுத்திர நீர் வீழ்ச்சியிலிருந்து தயார் செய்யப்படும் மின்சார சக்தியைப்பற்றிப் பலரும் கேட்டிருப்பார்கள். பொன், இரும்பு முதலிய உலோகங்கள் கிடைக்கக்கூடிய சுரங்கங்கள் எங்கள் நாட்டிலேயே உள்ளன.

எங்கள் நாடும் சரித்திரப் பிரசித்தமானது. அதை அநேக இராஜாக்கள் வெகுகாலங்களாக ஆண்டுவந்திருக்கின்றனர். அநேக யுத்தங்கள் எங்கள் நாட்டில் நடைபெற்றிருக்கின்றன. இப்போது இராஜரிஷி என்று போற்றப்படும் மாட்சி மிக்க கிருஷ்ணராஜ உடையார் ஆளும் மைசூர் இராஜ்ஜியம் எங்கள் நாட்டிலுள்ளதே. எங்கள் பாஷை மிக்க இனிமையுடையது. அது பஞ்சத்திராவிட பாஷைகளுள் ஒன்று. நஞ்சங்கோட்டுச் சிவாலயமும், மைசூர் சாமுண்டேசுவரி கோயிலும் பார்க்கத்தக்கவை. சந்தனமரம் எங்கள் நாட்டில் விசேஷம். கம்பள நெசவும் எங்கள் நாட்டில் நடைபெறுகிறது. எங்கள் நாட்டார்கள் ளங்கபடற்றவர்கள்; அன்புடையவர்கள். இவை கன்னட நாட்டின் சிறப்பாம்.

உபாத்தியாயர்: பிள்ளைகளே, நீங்களிப்போது கேட்டதிலிருந்து தமிழ், தெலுங்கு, மலையாள, கன்

னட நாட்டுச் சிறப்புக்களையும், அந்தந்த நாட்டார் பழக்க வழக்கங்களையும் அறிந்தீர்கள். இவற்றை நீங்கள் மறவாது ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, ஒருவரிடத்து ஒருவர் அன்பும், நன்மதிப்பு முடையவர்களாய் நடந்துகொள்ளுவீர்களாக.

அருஞ்சொற்கள்:—ஆசிரியர், நடையுடைபாவனைகள், இல்லம், ரம்மியம், சமர்த்தர், மந்திரவாதி, செறிந்த, ஜலாசயம், மின்சாரம், இராஜரிஷி, பஞ்சத்திராவிடம், கள்ளங்கபடு, நன்மதிப்பு.

## 12. கூட்டுறவுச் சங்கம்

### ஜில்லா ஐக்கிய நிதி

நாம் முன்பு ஒரு புத்தகத்தில் கிராம ஐக்கிய சங்கத்தைப்பற்றிப் படித்தோமல்லவா? ஐந்நூறு ஐக்கிய சங்கங்கள் சேர்ந்தால் ஒரு யூனியன் ஆகும். சாதாரணமாய் ஒரு ஜில்லாவில் நான்கு அல்லது ஐந்து யூனியன்கள் இருக்கலாம். இந்த ஐக்கிய சங்கங்களும் யூனியன்களும் என்ன செய்கின்றன? இவை ஜனங்களுக்குக் குறைந்த வட்டிக்குப் பணம் கடன் கொடுக்கின்றன. பிறகு அந்தப் பணத்தைச் சந்தாக்களாக வசூல் செய்கின்றன. இவைகளுக்குப் பணம் எங்கிருந்து கிடைக்கிறது? இதைப்பற்றிச் சிறிது அறிந்துகொள்ளலாம்.

ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு ஜில்லா ஐக்கிய சங்கநிதி உண்டு. இந்த நிதியில் யார் வேண்டுமானாலும் பங்கு எடுத்துக்கொண்டு அங்கத்தினராகச் சேரலாம். நிதிப்பங்கு ஒன்றின் தொகை ரூபா பத்து முதல் நூறுவரையில் இருக்கும். இப்படிப் பங்கெடுத்தவர்கள் ஒவ்வொருவரும் நிதியின் அங்கத்தினராவர். இந்த அங்கத்தினர்




வருஷத்திற்கு ஒருமுறை கூடி, தங்களில் சிலரை நிதியின் காரியங்களை நடத்துவதற்காகத் தேர்ந்தெடுப்பார்கள். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே நிதியின் டைரெக்டர்கள், அல்லது நிருவாகிகள் ஆவார்கள். பிறகு இந்த நிருவாகிகள் கூடித் தங்களில் ஒருவரைத் தலைவராகவும், மற்றொருவரை உதவித்தலைவராகவும், வேறொருவரைக் காரியதரிசியாகவும் நியமித்துக்கொள்வார்கள்.

நிதியானது இந்த டைரெக்டர்களாலேயே நிருவகிக்கப்படும். தலைவர், காரியதரிசி உள்பட டைரெக்டர்கள் யாவரும் கௌரவ உத்தியோகஸ்தர்களே. இவர்களுக்குச் சம்பளம் கிடையாது. சாதாரணமாய் நிதியில் நடக்கவேண்டிய

வேலைகளையெல்லாம் இவர்கள் பார்த்துக்கொள் வார்கள். புதிய சட்டங்களை யேற்படுத்தவேண்டு மானால், அங்கத்தினர் யாவரும் ஒன்றுகூடிய பொதுக்கூட்டத்தில்தான் ஏற்படுத்தவேண்டும். தலைவர், காரியதரிசி முதலிய உத்தியோகஸ்தர்க ளுள் யாராவது ஒழுங்காய் வேலைசெய்யாவிட் டாலும், அவர்கள்மீது நம்பிக்கைக் குறைவு ஏற் பட்டாலும், அவர்களை நீக்கிப் பிறரைத் தேர்ந் தெடுக்க அங்கத்தினர் அடங்கிய பொதுக்கூட் டத்துக்கு எப்போதும் அதிகாரம் உண்டு.

இந்த நிதி செய்யும் வேலை என்ன? ஜில்லாவி லுள்ள கிராம ஐக்கிய சங்கங்களுக்குக் கடன் கொடுத்து, அதை மறுபடியும் வசூல்செய்வதே இதன் முதன்மையான வேலையாகும். கடன் கொடுக்க நிதிக்குப் பணம் ஏது? பலவிதங்களில் இதற்கு வருவாயுண்டு. அங்கத்தினர் செலுத்தும் கட்டணம் இந்த நிதியின் மூலதனமாகும். அர சாங்கத்தாரும் அப்போதைக் கப்போது பொரு ளுதவி செய்வார்கள். மேலும் மற்ற ஜனங்களிட மிருந்தும் கடன் வாங்க நிதியின் நிருவாகிகளுக்கு அதிகாரம் உண்டு. இவர்கள் இவ்விதம் கடன் வாங்கி, வாங்கின தொகைமேல் சிறிது வட்டி அதிகமாக வைத்துக் கிராம ஐக்கிய சங்கங்களுக் குக் கடன் கொடுப்பார்கள். இதனால் சிறிது இலாபம் கிடைக்கும். இந்த இலாபத்தொகையி லிருந்து, கணக்கர் சம்பளம், வேலையாட்கள் கூலி முதலிய செலவுகட்கு வேண்டிய தொகைபோக மிஞ்சுவது, அங்கத்தவர்களுக்கு அவரவர் பங்குக் குத் தக்கபடி, ஆதாயமாய்ப் பிரித்துக் கொடுக்கப் படும்.

அரசாங்கத்தாரிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் கடன்வாங்கும் பணத்துக்கு நிதியின் நிருவாகிகள் பொறுப்பாவார்கள். இவர்கள் கடன் பெறுமுன், யாரிடத்திலிருந்து கடன் வாங்குகிறார்களோ அவர்களுக்கு வாக்குறுதிச் சீட்டு எழுதிக் கொடுக்கவேண்டும். இவர்கள் கொடுக்கும் கடனுக்காக யூனியன் இவர்களுக்கு உத்தரவாதமாகும். யூனியனுவது ஒவ்வொரு கிராம சங்கத்தலைவரும் மற்றும் சிலரும் கூடிய ஒரு சங்கமாகும். இச்சங்கத்தினர் அப்போதைக் கப்போது கூடி, எந்தக் கிராமவாசிகளுக்கு எவ்வளவு கடன்வேண்டும், சங்கம் எவ்வளவு கொடுக்கக்கூடும் என்று யோசித்துத் தீர்மானம் செய்து, மொத்தமாய் நிதியிலிருந்து கடன் வாங்குவார்கள். பின்பு அந்தத் தொகையைக் கிராம சங்கங்களுக்குப் பிரித்துக் கொடுப்பார்கள். கிராம சங்கங்கள் தகுந்த பொறுப்பின்மேல், தம்மிடம் கடன் கேட்பவர்களுக்குக் கடன் கொடுக்கும்.

ஜில்லா ஐக்கிய நிதியை அவற்றின் டைரெக்டர்களேயன்றி அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களும் மேற்பார்வை யிடுவார்கள். நிதியின்வேலை ஒழுங்காய் நடந்து வருகிறதா என்று கவனிப்பதும், வேண்டிய யோசனைகள்கூறி நிதி முன்னேற்றமடைய ஏற்பாடுகள் செய்வதும் இவர்களுடைய கடமையாகும்.

அருஞ்சொற்கள்:—சந்தா, நிதி, அங்கத்தினர், வருவாய், மூலதனம், பொறுப்பு, வாக்குறுதி, உத்தரவாதம், முன்னேற்றம்.





## 13. ஒளவையார்

ஒளவையார் பெயரைக் கேட்டிராத தமிழர் இத்தேசத்தில் ஒருவருமிரார் என்றே கூறலாம். இவர் சோழநாட்டில் திருச்சிராப்பள்ளிக்கு அடுத்துள்ள உறையூரில் அவதரித்தார். தாய்தந்தையரான ஆதி, பகவன் என்போர் குழந்தை பிறந்தவுடனே அதை ஒருசாவடியில்விட்டுச்சென்றனர். அருகிலிருந்த சேரியில் வசித்துவந்த ஒருவன், அக்குழந்தையை எடுத்து அதிக அன்புடன் வளர்த்துவரலானான்.

ஔவையாருக்குத் திருவள்ளுவர், கபிலர், அதிகமான் என்ற மூன்று சகோதரர்களும், உப்பை, உருவை, வள்ளி என்ற மூன்று சகோதரிகளும் உண்டு என்பர். இவர்கள் யாவரும் சிறந்த புலமை உள்ளவர்கள். ஒப்புயர்வற்ற நூலாய் விளங்கும் திருக்குறளை இயற்றியவர் இவரது சகோதரரான திருவள்ளுவர்தான்.

ஔவையார் சரஸ்வதியின் அமிசமென்றும் கூறுவர். இவர் சிறந்த கல்வியறிவோடு தெய்வ பக்தியும் உடையவராய் விளங்கினார். இவர் நாள் தோறும் விநாயகரைப் பூசியாமல் உண்பதில்லை. இவர் விநாயகர்மீது பாடியுள்ள பாடல்கள் பிரசித்தமானவை. அப்பெருமானது திருவருளை இவர் நிரம்பவும் பெற்றவர்.

அன்பு, பொறுமை, வாய்மை முதலிய பல சிறந்த குணங்கள் ஔவையாரிடம் நிரம்பியிருந்தன. இவர் தனவந்தர், ஏழைகள் என்ற வேற்றுமை சிறிதுமின்றி, யாவரிடத்தும் மிக்க அன்பு பூண்டு தம்மாலியன்றவளவு உபகாரஞ் செய்து வந்தார். இவரது கல்வியறிவு, புகழ் முதலியவற்றைக் கேள்வியுற்ற சேரசோழ பாண்டிய அரசர்கள் இவரை மிக்க மரியாதையுடன் வரவேற்று உபசரித்தனர்.

இவர் ஜனங்களுக்குச் செய்த நன்மையைப் பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. தமக்கு யாராவது சிறிதளவு உபகாரஞ் செய்தாலும் அதனை மிகப் பெரிதாய்ப் பாராட்டிக் கூறுவர்.

ஒரு சமயம் இவர் ஒரு வழியே சென்றுகொண்டிருந்தபோது மழையினாலும் பசியினாலும் மிக்க வருத்தமுற்றார். அச்சமயம், தாய்தந்தையரற்ற

ஒரு குடியானப் பெண் இவரை அன்புடன் வரவேற்று, ஆகாராதிகள் கொடுத்து உபசரித்தாள். ஔவையார் இதனை மறவாது மனத்து வைத்திருந்து, பின் அப்பெண்ணுக்கு நல்ல மணவாளனைத் தேடிச் சிறப்போடு மணம் செய்வித்தார்.

மற்றொரு சமயத்தில், தெய்வீகம்பொருந்திய பாடல்பாடி, வெட்டுண்டு கிடந்த மரம் தளிர்த்துச் செழிக்கும்படி செய்தார்.

தமிழ்நாட்டுச் சிறுவர்களும் சிறுமிகளும் அறநெறியில் வாழவேண்டுமென்று விரும்பி, ஔவையார் அவர்கட்கேற்ற முறையில் அருளிச்செய்துள்ள நூல்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி என்பனவாகும்.

ஔவையார் பாடல்கள் சிறந்த நீதிகளைச் சுருங்கிய சொற்களால் விளங்க வைக்குந் திறமை பொருந்தியவை. இவைதவிர, இவரால் பாடப்பட்ட பல தனிப்பாடல்களும் உண்டு.

ஔவையார் நெடுங்காலம் பூமியில் வாழ்ந்திருந்து, மிகவும் தளர்ந்த வயதில் இறைவன் திருவடியடைந்தார்.

அருஞ்சொற்கள்:—சாவடி, சேரி, இயற்றியவர், அமிசம், வாய்மை, தனவந்தர், மரியாதை, வரவேற்று, உபசரித்தனர், ஆகாராதிகள், மணவாளன், அறநெறி, தனிப்பாடல், இறைவன், திருவடியடைந்தார்.



## 14. சுகாதாரம்

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'. எவ்வளவு எளியவர்களாயிருந்தாலும், என்ன அசௌகரிய முள்ளவர்களாயிருந்தாலும், நோ

யற்ற வாழ்வை யுடையவர்களே சிறந்த பாக்கிய சாலிகளாவார்கள். வியாதியின்றிச் சுகமாய் வாழ்தல் தனவந்தர்களுக்கு மாத்திரம் உரித்தானதல்ல: யாவரும் நோயற்று வாழலாம். ஆனால், நோயற்று வாழ விரும்புவோர் சில முறைகளைக் கையாண்டுவருவது மிக்க அவசியமாகும். இதற்குப் பணச்செலவு ஏதுமில்லை நோய் வந்தபிறகு அதனை நீக்க வழிதேடுவதைவிட, நோய் வராமல் பாதுகாத்துக்கொள்வதே மேல். 'நோய்க்கிடங் கொடேல்' என்று நம் ஔவைப் பிராட்டியாரும் ஆணை தந்திருக்கிறார்கள் அல்லவா?

நம்முடல் நலத்தைக் காப்பாற்றிக்கொள்ள நாம் அநுசரிக்கவேண்டிய முறைகளுள் முக்கியமானவை சுத்தமான காற்றையே சுவாசித்தல், தூய்மையான உணவும் நீரும் உட்கொள்ளல், அவசிய வசதிகள் வாய்ந்த வீட்டில் வசித்தல், அழுக்கற்ற ஆடை அணிதல் முதலியனவாகும்.

மனிதன் உயிரோடிருப்பதற்கு நல்ல காற்று அவசியமாகும். நாம் சுவாசிக்கும் காற்று நமது உடலுக்குள் சென்று, அங்குள்ள கெட்ட இரத்தத்தைச் சுத்திசெய்து, கெடுதியான கழிவுப் பொருளுடன் வெளிவருகிறது. ஆகையால், இப்படிக் கெட்டு வெளிப்படும் காற்றை நாம் ஒருபோதும் உட்கொள்ளக்கூடாது.

இரண்டாவதாக, நன்னீர் நம் சுகவாழ்வுக்கு முக்கியமானதாகும். நாம் குடிக்கும் நீரானது நம் உடல்முழுதும் பரவி, நுட்பமான ரத்த கோசங்களுக்குள்ளும் நுழைகிறது. ஆகையால், அது பரிசுத்தமாயிருக்க வேண்டுவது அவசியம். தண்ணீரில் அசுத்தங்கள் இரண்டுவிதமாய் இருக்கும்:

ஒன்று மிதந்துகொண்டிருப்பது, மற்ருென்று கரைந்திருப்பது. ஆகவே, நாம் குடிக்கும் ஜலத்தை நன்ருய் வடிகட்டிக் காய்ச்சி உட்கொள்ளுதல் நலம்.

மூன்ருவதாக, ஆகாரம் முக்கியமானது. உடலுக்கு உரத்தைக்கொடுப்பது உணவே. ஆயினும், நம்மவர்களில் பலர் தாம் உட்கொள்ளும் உணவைப்பற்றிப் போதுமானவளவு கவனிப்பதில்லை. இவ்விஷயத்தில் ஜாக்கிரதையா யிருப்பவர்கள் பல நோய்களினின்றும் தப்பலாம். உண்ணும் உணவு சுத்தமாயிருப்பதோடு, எளிதில் ஜீரணமாகத்தக்கதாயும் இருக்கவேண்டும். வயிறு மிக நிரம்ப உணவு கொள்ளக்கூடாது. அடிக்கடியும் உண்ணக்கூடாது. குறித்த சில நேரங்களில் மட்டும் சாப்பிடவேண்டும். சாப்பிடும்போது அவசரப்படக்கூடாது. மெல்லக்கூடியவற்றை நன்ருய் மென்று சாப்பிடவேண்டும். அப்போது தான் சாப்பிட்ட உணவு சரியாய் ஜீரணமாகும். வயிற்றுவலி, தலைவலி, சுரம் முதலிய நோய்களை மருந்தில்லாமல் பத்தியமான ஆகாரத்தைக் கொண்டே போக்கடிக்கலாம். உண்ட உணவு வயிற்றில் அற்றுவிட்ட பின்பே மீண்டும் உணவு கொள்வோர்க்கு மருந்தென ஒன்று வேண்டியிராது.

சரீரத்திலுள்ள அசுத்தங்கள் மலஜலமாகவும், வியர்வையாகவும் வெளிவருகின்றன. இவைகளின் கழிவைப்பற்றியும் நாம் கவனிக்கவேண்டும். உடம்பில் அழுக்கற நன்ருய்த்தேய்த்து நாள்தோறும் குளித்துவந்தால், வியர்வை வழியாய்க் கழியும் அசுத்தம் நீங்கிவிடும். மற்ற

இரண்டு அசுத்தப் பொருள்களும் உடம்பில் தங்காமல் உரியவேளைகளில் கழிந்துபோம்படி பார்த்துக்கொள்ளல் மிகவும் முக்கியம். இதில் கோளாறு நேர்ந்தால், நோய் வருவது நிச்சயம்.

நாம் உடுக்கும் உடையும் துப்புரவா யிருக்க வேண்டும். உடை எப்பொழுதும் உடலோடு பொருந்தியே இருப்பதால், உடையிலுள்ள அசுத் தம் சுலபமாய் உடற்குள் செல்லும். உடை, விலை யுயர்ந்ததாய் இருக்கவேண்டிய அவசியமே இல்லை; அழுக்கற்றிருக்க வேண்டியதுதான் முக் கியம்.

நாம் வசிக்கும் இடம் ஜனநெருக்கமானதா யில்லாமலும், காற்று வெளிச்சங்களோடு கூடிய தாயும் இருக்கவேண்டும். வீட்டுப் பக்கங்களில் ஆடுமாடுகளைக் கட்டிவைக்கக்கூடாது. தண்ணீர் குட்டை குட்டையாய்த் தேங்கியிருக்கவும் விடக் கூடாது. வீடு, நில மட்டத்துக்குத் தாழ்ந்திராமல் உயர்ந்திருத்தல் நலம். வீட்டினுள்ளும், அதைச் சுற்றிலும் சேரும் குப்பை முதலிய அசுத்தங்களை அடிக்கடி அப்புறப்படுத்தவேண்டும்.

நாம் நம்முடைய மனதை நல்வழியில் நிலைக்க வைத்திருக்கவேண்டும். பேராசை, பொறாமை, கோபம், துக்கம் முதலியவற்றுக் கிடங்கொடாமல் மனதைக் காப்பாற்றினுல், உடலுக்கும் நன்மை உண்டாம். கோபம் முதலிய கெட்ட குணங் கள் இரத்தத்தில் விஷத்தை உண்டாக்கு கின்றனவென்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். அவரவர் வயதுக்கும் வலுவிற்கும் ஏற்றபடி, நாள்தோறும் முறையாக உடற்பயிற்சி செய்து வருவது ஒவ்வொருவருக்கும் அவசியமானது.

இவ்விதிகளையெல்லாம் நாம் சரியாய் அநுசரித்து வந்தால், நோயற்ற வாழ்வைப்பெற்று நெடுங்காலம் இன்பமாய் வாழ்ந்திருக்கலாம்.

"உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்து
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே."

அருஞ்சொற்கள்:—பாக்கியசாலி, உரிமை, ஆணை, அநுசரி, தூய்மை, வசதி, கழிவு, நன்னீர், ரத்தகோசம், உரம், உரியவேளை, கோளாறு, தப்புரவு, நல்வழி, பெருநன்மை, அறிஞர்.

## 15. அப்பர்

முன்காலத்தில் நம் தமிழ்நாட்டில் பல சமயாசாரியர்கள் தோன்றி மக்களுக்கு நன்மை புரிந்து வந்தார்கள். அப்பெரியோர்களில் சிலர் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள். இவர்களுள் ஒருவராகிய அப்பரது சரித்திரத்தை இங்குச் சுருக்கமாய் அறிந்துகொள்வோம்.

அப்பர், தென் ஆற்காடு ஜில்லாவில், பண்ணுருட்டிக்கு அருகிலுள்ள திருவாமூர் என்னும் ஊரில், வேளாளர் குலத்தில் அவதரித்தார். அவரது தந்தையார் பெயர் புகழனர். தாயார் பெயர் மாதினியார். அவருக்குத் திலகவதியார் என்ற பெயருள்ள தமக்கையார் ஒருவர் உண்டு. அவருக்குத் தாய் தந்தையர் இட்ட பெயர் மருள்நீக்கியார். அவரது இளமையில் பெற்றோர்கள் உயிர் துறந்தார்கள். இவர்கள் திலகவதியாரைக் கலிப்பகையார் என்னும் ஒரு சேனுதிபதிக்கு மணம் செய்விக்க நிச்சயித்திருந்தார்கள்; ஆனல் இப்படிச் செய்யுமுன் இறந்துவிட்டார்கள். இது நடந்த சிலநாட்களில், கலிப்பகையாரும் வெற்றி

யுடன் செய்த போர் ஒன்றில் வீரசொர்க்கம் சேர்ந்தார். தந்தையார் இறந்தபோது தாயார் உடன்கட்டை ஏறியதைப் பார்த்திருந்த திலகவதியார், கலிப்பகையார் மடிந்ததைக் கேட்டு மனம் சகியாது, தாமும் தீயில் விழுந்து சாகத் தீர்மானித்தார். அச்சமயத்தில் மருள்நீக்கியார் தாய் தந்தையற்ற தம்மைத் தாய்போல் இருந்து காப்பாற்றும்படி தமக்கையாரை வேண்டினார். அவரும் அதற்கிணங்கித் தவ ஒழுக்கங் கைக்கொண்டு உயிர் தாங்கி இருந்தார்.

திலகவதியார் ஆதரவில் வளர்ந்து வந்த மருள்நீக்கியார் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். அவர் குடும்பப் பொருளைக்கொண்டு பல தருமங்கள் செய்தார். பல சமயங்களுள்ளும் சிறந்த சமயம் யாதென்று ஆராய்ந்துவந்தார். இவ்வாறு செய்த ஆராய்ச்சியில் சமண மதமே சிறந்ததெனக் கண்டு, அதைத் தழுவித் துறவு பூண்டார். அவரது கல்வியறிவையும், ஒழுக்கத்தையும் கண்ட சமணர்கள் அவரைத் தமது தலைவராகக் கொண்டார்கள். அப்போது அவர்கள் அவருக்குத் தருமசேனர் என்ற பட்டந் தந்தார்கள்.

இதற்குள் திலகவதியார் திருவதிகை என்னும் தலத்தில் வந்து தங்கிச் சிவாலயத்தில் திருத்தொண்டு செய்துவந்தார். தம்பியார் சமணராய் விட்டதற்காக மிக்க வருத்தமுற்றார். அவர் திருவதிகைச் சிவபிரான் சந்நிதியில் சென்று, 'சுவாமி! சமணத்தில் வீழ்ந்துவிட்ட தம்பியை அதனின்றும் எடுத்துக் காத்தருளல் வேண்டும்' என்று பலமுறை பிரார்த்தித்தார். அதற்கு இரங்கிய சிவபெருமான் திலகவதியார் கனவில்

தோன்றி, தருமசேனருக்கு வயிற்றிலே கொடிய சூலை நோயை உண்டாக்கி ஆட்கொள்வதாக அருளிச்செய்தார். அப்படியே தருமசேனருக்குச் சூலைநோய் தோன்றியது. அதனை எவராலும் தீர்க்க முடியவில்லை. இச்சமயத்தில் தருமசேன ருக்குத் தம் தமக்கையார் நினைவு வரவே, தம்மை யவர் காண வரவேண்டுமென்று விண்ணப்பிக்க யனுப்பினார். ஆனால், திலகவதியார் சமணர் வசித்துவந்த விடத்திற்குச் செல்லச் சம்மதிக்க வில்லை. இதனையறிந்த தருமசேனர் இரண்டு ஆட்களைத் துணையாகக் கொண்டு, ஓர் இரவிலே திருவதிகை சேர்ந்து, தமக்கையாரைச் சரண மடைந்தார். பின்பு, திலகவதியார் தந்த திரு நீற்றை அணிந்து சைவசமயத்தில் பிரவேசித்து, திருவதிகைச் சிவாலயத்துட்சென்று, வீரட்டா னேசுவரரை வணங்கித் தம் சூலைநோய் நீங்க வேண்டுமென்று பாடித் துதித்தார்.

நோய் மாயமாய் நீங்கியது. அவரது இனிய பாடலைக் கேட்ட சிவபெருமான் அசரீரியாய் நின்று, "அற்புதமான பதிகத்தைப் பாடியதனால், உனக்கு இனி 'நாவுக்கரசு' என்னும் பெயர் வழங் குக" என்று கூறியருளினார். அதுமுதல் அவ ருக்குத் திருநாவுக்கரசர் என்ற பெயர் உண்டா யிற்று.

தருமசேனர் சமண மதத்தைவிட்டுச் சைவ சம யம் புகுந்ததைக் கேள்வியுற்ற சமண அரசனான மகேந்திரவர்ம பல்லவன் திருநாவுக்கரசரைப் பலவிதத்திலும் கொல்ல முயன்றான். ஆனால், அவன் உண்டாக்கிய ஒவ்வொரு ஆபத்தினின் றும் சிவபிரான் அருளால் அவர் தப்பினார். தம்

மைக் கொல்ல முயன்றவர்க்கு அவர் ஒரு கேடும் நினைக்கவில்லை. இதைக்கண்டு ஆச்சரியமடைந்த பல்லவ அரசனும் சமணம் விட்டுச் சைவம் சார்ந்தான். பின்பு திருநாவுக்கரசர் பல தலங்களுக்கும் சென்று அருமையான பதிகங்கள் பாடிவந்தார்.

இப்படி இருக்கையில், சீர்காழியில் அவதரித்து, தெய்வத்தன்மையோடு விளங்கியிருந்த திருஞானசம்பந்தரைப் பற்றித் திருநாவுக்கரசர் கேள்விப்பட்டு அவரைக் காணச்சென்றார். சம்பந்தர் அவரை முதன்முதல் கண்டபோது 'அப்பரே' என்று அன்புடன் அழைத்தார். அப்பெயரே இப்போதும் அதிகமாய் வழங்கிவருகிறது. இவ்விரண்டு சைவாசாரியர்களும் ஒருவர்மீதொருவர் பேரன்பு கொண்டார்கள். பின்பு இருவரும் ஒன்று சேர்ந்து பல தலங்களைத் தரிசித்துப் பாடல்கள் பாடிப் பரமன் புகழைப் பரப்பிவந்தார்கள்.

இவர்கள் திருவீழிமிழலையில் தங்கியிருந்த போது, பஞ்சத்தால் நாடு வருந்தியது. அப்போது ஆண்டவன் இவர்களுக்கு நாள்தோறும் தந்தருளிய பொற்காசுகளைக் கொண்டு, தங்களை வந்தடைந்தோர்க்கு அன்னமளித்து வந்தார்கள்.

அப்பர் மற்றொரு சமயத்தில் பதிகம் பாடிப் பாம்பு தீண்டி இறந்த பாலன் ஒருவனைப் பிழைத்தெழும்படி செய்தார்.

சிலநாள் கழித்து, அப்பரும் சம்பந்தரும் வேதாரணியத்தை அடைந்தார்கள். அங்குள்ள கோயிலின் வாயில் நெடுங்காலமாக மூடப்பட்டிருந்த தன் காரணத்தைச் சம்பந்தர் கேள்வியுற்றார். உடனே அவர் அக்கதவு திறக்கும்படி பாட அப்பரை வேண்டினார். அப்பரும் அவ்வாறே பாடிக் கத

வைத் திறப்பித்தார். கடவுள் அப்பருக்குக் காட்டிய அருள் காரணமாக விளைந்த அற்புதங்கள் இன்னும் பல உண்டு.

திருநாவுக்கரசர் தமிழ்நாட்டின் பல பாகங்களிலும் யாத்திரைசெய்து, சென்றவிடங்களிலெல்லாம் மக்கள் மனதில் தெய்வ சிந்தனையை வளர்த்துவந்தார். ஒருமுறை இவர் வடகயிலையைக் காணவேண்டும் என்னும் உறுதிகொண்டு, அடியார் கூட்டத்தோடு காசிவரையிலும் சென்று, அதற்கப்பால் இமயமலைப் பிரதேசத்தில் தாமே தனித்து நடந்து, கை கால்களெல்லாம் தேய்ந்து, உடல் நகரவும் முடியாத நிலை வருமளவும் கைலையை நோக்கி யாத்திரை பண்ணினார்.

கடைசியாய்த் திருப்புகலூர் என்னும் தலத்தை அடைந்தார். அங்குச் சிலகாலம் தங்கிச் சிவாலயத்தில் தொண்டு செய்திருந்தபோது, சிவபெருமான் இவ்வடியவர் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை மூன்றுமற்ற முனிவர் என்னும் உண்மையை உலகறிய விளக்கியருளினார். பின்பும் அப்பர் அத்தலத்திலே இருந்து பணிசெய்து வந்து, தமது எண்பத்தோராவது வயதில், ஈசன் திருவடியடைந்தார்.



அப்பர் அரிய துறவி. பெரிய சிவஞானி. அவரிடத்தில் சாந்தமும், பொறுமையும், நிலைகலங்கா உறுதியும், பக்தி ஞானங்களும் சிறந்து விளங்கின.

அவர் பாடிய பாடல்களும் தேவாரம் எனப்படும். தாண்டகம் என்னும் ஒருவகைப் பாடல்களைப் பாடினமையால் அவரைத் தாண்டக வேந்தர் என்றும் பெரியோர் போற்றுவர். சிவாலயங்

களில் வைத்திருக்கும் சைவ சமயாசாரியர் நால்வர் திருவுருவங்களில், அப்பரை அவர் தோளிற் சார்த்தியிருக்கும் உழவாரப்படையால் அறியலாம்.

"சொற்குறுதி அப்பர் எனச்சொல்".

அருஞ்சொற்கள்:—வேளாளர், உயிர் துறந்தார்கள், தவ ஒழுக்கம், ஆதரவு, துறவு, சூலைநோய், மாயமாய், அசரீரி, பதிகம், சார்ந்தான், நெடுங்காலம், அற்புதங்கள், தெய்வசிந்தனை, தொண்டு, முனிவர், சிவஞானி, போற்றுவர், திருவுருவம், உழவாரப்படை.



## 16. மார்க்கண்டேயர்

நமது நாட்டில், மூத்தவர்கள் இளையவர்களை ஆசீர்வதிக்கும்போது, 'மார்க்கண்டேயரைப் போல் என்றும் சிரஞ்சீவியாய் இருக்க' என்று கூறுவது வழக்கம். இதன் பொருள் என்ன? மார்க்கண்டேயர் என்பவர் யார்? இந்த விஷயங்களை நாம் தெரிந்துகொள்வோம்.

நெடுங்காலத்துக்குமுன் அநாமயம் என்னும் தபோ வனத்தில் மிருகண்டு என்னும் முனிவர் ஒருவர் இருந்தார். அவரும் அவர் மனைவியாராகிய மருத்துவதியும் நெறிதவறுத சிவபக்தர்கள். நெடுநாள் வரையில் அவர்களுக்குப் புத்திரப் பேறு வாய்க்கவில்லை. அக்குறையை நீக்க விரும்பி, மிருகண்டு முனிவர் மனைவியோடு காசிமாநகரம் வந்து தங்கி, ஒருவருடகாலம் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார். இறைவன் அவர்முன் தோன்றி "உனக்கு வேண்டிய வரம்யாது?" என்று கேட்க,முனிவர் தம் மனக் குறையை விண்ணப்பித்தார். சிவபிரான் உனக்கு

அழகிலும், அறிவிலும், எம்மிடத்து அன்பிலும் சிறந்து விளங்குவோனாய்ப் பதினாறாண்டே ஆயுளாயுடைய புதல்வன் வேண்டுமோ? அல்லது, துஷ்டனும், குரூபியும், மூடனும், வியாதியஸ்தனுமாய் நூறாண்டு இருக்கும் ஒருவன் வேண்டுமோ?" என வினவினார். அதற்கு முனிவர், "அற்பாயுளுடையவனே யானாலும், புத்தியும் பத்தியுமுடைய புத்திரனே வேண்டும்" என்று விண்ணப்பித்தார். அவர் வேண்டியபடியே சிறிது காலத்திற்குள், பேரழகு வாய்ந்த ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அதற்கு மார்க்கண்டன் என்று பெரியோர் பேரிட்டனர்.

பின்பு, மார்க்கண்டருக்குத் தகுந்த வயதில் உபநயனமும் வித்தியாரம்பமும் செய்விக்கப்பட்டன. அவர் அறிவிலும், சிவபத்தியிலும், வாய்மை, பொறுமை, இரக்கம், பெரியோரிடத்து வணக்கம் முதலிய அருங்குணங்களிலும் சிறந்து விளங்கினார்.

இங்ஙனம் மார்க்கண்டர் சிறப்புற்று வளர்ந்து வருகையில், பதினாறுவது வயதும் தொடங்கியது. 'இனி விரைவில் நம் அருந்தவ மைந்தனை இழக்க நேருமே' என்று பெற்றோர் இருவரும் பெருந்துயர் அடைந்தார்கள்; தனித்தனி விம்மியழுதார்கள். அவர்கள் படுங் கடுந்துன்பத்திற்குக் காரணம் இன்னதென்று மார்க்கண்டர் அவர்களைக்கேட்டு அறிந்துகொண்டார். பிறகு, அவர் தாம் பரமசிவனைப் பூசித்துத் தமக்கு மரணம் வராமல் தடுத்துக்கொண்டு திரும்பிவருவதாகப் பெற்றோர்களுக்குச் சமாதானங் கூறி, விடைபெற்றுப் புறப்பட்டார்.

மார்க்கண்டேயர் காசிச் சிவாலயத்தை அடைந்து, சிவலிங்கமொன்றைத் தாபித்து, பல நாள் அல்லும் பகலும் அன்புடன் பூசித்து வந்தார். அவரது ஆயுள் முடியவேண்டிய காலமும் நெருங்கியது. அவரது பக்திக்கு வசப்பட்ட பரமசிவன் பிரத்தியக்ஷமாகி, எமன் கையிலகப்படாமல் அவரைக் காத்தருளுவதாக வரந்தந்து மறைந்தார். மார்க்கண்டருக்குப் பதினாறுண்டு முடிந்ததும், எமன் முதலில் தூதுவரையும், பின்பு தன் மந்திரியாகிய காலனையும் அனுப்பி, அவர் உயிரைக் கைப்பற்ற முயன்றான். சிவபூசையில் உறுதியாய் நின்ற அச்சிறுவரிடம் அவர்கள் அணுக முடியவில்லை. அப்பால் எமனே தன் எருமைமீதேறிவந்து, மார்க்கண்டரைத் தன்னுடன் வரும்படி அழைத்தான். அவர் சிவனடியார் எமனுலகு வரமாட்டார் என்று செப்பி மறுத்துவிட்டார். உடனே அவரையும் எமன், அவர் அடைக்கலம் புகுந்து தழுவிநின்ற சிவலிங்கத்தையும் ஒன்றாய்ச் சேர்த்துப் பாசத்தை வீசி இழுக்கலானான். உடனே சிவலிங்கத்திலிருந்து பரமசிவன் வெளிப்பட்டு, எமனைத் தமது திருவடியால் உதைத்து வீழ்த்தி, மார்க்கண்டேயர் என்றும் பதினாறு வயதினராயிருக்கும்படி அநுக்கிரகித்து மறைந்தருளினார்.

இவ்வாறு மார்க்கண்டேயருக்காக இறைவன் எமனை உதைத்து அருளிய தலம், தஞ்சாவூர் ஜில்லாவில் பிரசித்தியுடன் விளங்கும் திருக்கடவூர் என்றும் சிலர் சொல்லுவதுண்டு.

'எமனவன் பொல்லாதன் விடமாட்டான்; சாம்பசிவன் பக்தர்களைத் தொடமாட்டான்' என்

னும் ஒரு பழம்பாட்டும், விடாமுயற்சியால் விதியையும் வென்றுவிடலாம் என்னும் பெரிய உண்மையும் இங்கு நாம் நினைக்கத்தக்கவை.

அருஞ்சொற்கள்:—சிரஞ்சீவி, தபோவனம், நெறிதவருத. விண்ணப்பித்தார், குரூபி, வினவினுர், உபநயனம், வித்தியாரம்பம், அருந்தவமைந்தன், வசப்பட்ட, பிரத்தியக்ஷம், செப்பி, அநுக்கிரகித்து.



## 17. கடிதம் வரைதல்.

நம்முடைய எண்ணத்தை மற்றவர்களுக்கு வாயினுல் பேசித் தெரிவிக்கின்ருேம். அப்படி நாம் பேசவேண்டிய மனிதர் நேரில் இல்லாவிட்டால் என்ன செய்கின்ருேம்? கடித மூலமாய்க் கருத்தைத் தெரிவிக்கின்ருேம். அது எப்படி?

நாம் பிறர்க்குத் தெரிவிக்க வேண்டிய விஷயங்களை ஒரு காகிதத்தில் எழுதி உறையிலிட்டு, எவருக்கு அனுப்ப எண்ணுகின்ருேமோ அவருடைய மேல்விலாசத்தை உறையின்மேல் எழுதி, அதைக் கொண்டுபோவதற்காகச் செலுத்தவேண்டிய கட்டணத்துக்குத் தபால்தலை வாங்கி ஒட்டித் தபால் பெட்டியில் போடவேண்டும் பின்பு அக்கடிதம் நாம் எழுதிய விலாசதாரருக்குப் போய்ச் சேரும். அவர் அக்கடிதத்தைப் பிரித்துப் படித்து விஷயங்களை அறிந்துகொள்வார். இது எவ்வளவு எளிதாய் இருக்கின்றது? இவ்விதமின்றி, ஒவ்வொன்றையும் நேரில் போய்ச் சொல்வதென்றுல் எவ்வளவு பணச்செலவாகும்? எவ்வளவு காலம் பிடிக்கும்?

தற்கால முறைப்படி, எழுதுபவருடைய விலாசமும் தேதியும் கடிதத்தின் வலதுகைத் தலைப்

புறத்தில் குறிக்கப்படவேண்டும். இடதுகைப் புறத்தில் விலாசதாரரை விளித்துக்கூறும் சொற்களை எழுதவேண்டும். யாருக்குக் கடிதம் எழுதுகின்றேமோ அவருடைய நிலைமைக்குத் தக்கவாறு அவை அமைந்திருக்கவேண்டும். பெரியோர்களுக்கும் மேல் உத்தியோகஸ்தர்களுக்கும் எழுதும்போது, விளிச்சொற்கள் மரியாதைபற்றி நிற்கும். நண்பர் உறவினர்களுக்கானுல் அன்பு பற்றி நிற்கும். உபாத்தியாயர் முதலியவர்க்கானுல் வணக்கப்பற்றி நிற்கும். பெற்றோர்களுக்கு, 'அன்பு மிகுந்த அப்பா அல்லது அம்மா' என்றும், சிநேகிதர்களுக்கு, 'அன்பார்ந்த நண்ப' என்றும், மேல் உத்தியோகஸ்தர்களுக்கு, 'கனம் பொருந்திய ஐயா' என்றும் எழுதுவது வழக்கம்.

கடிதம் எழுதும்போது நாம் கவனிக்கவேண்டிய விஷயங்கள் சிலவுண்டு: தெரிவிக்க விரும்பும் கருத்துக்களை ஒழுங்குபடுத்திச் சுருக்கமாகவும் பொருள் விளங்கவும் எழுதவேண்டும். ஒருமுறை எழுதின விஷயத்தையே மறுபடியும் எழுதக் கூடாது. சுலபமாய்ப் படித்து அறிந்துகொள்ளும்படி எழுத்துக்களைத் தெளிவாய் எழுதவேண்டும். விலாசதாரர் எதிரில் இல்லாததால், அவருக்கு யாதொரு சந்தேகமும் விபரீதமும் உண்டாகா வண்ணம் எழுதவேண்டியது மிக அவசியம்.

செய்தியை எழுதியானதும், கடிதத்தை முடிப்பதற்குச் சில விதரணைகள் உண்டு. இவையும் அவரவரது நிலைமைக்குத் தக்கபடியிருக்கும். பெரியோர்களுக்கெழுதுங் கடிதம் வணக்கத்துடனே அன்புடனே முடிவுறவேண்டும். சிறியவர்

களுக்கெழுதுவது ஆசியுடன் முடிவுறவேண்டும். கடைசியில், கடிதத்தின் கீழே கையொப்பமிட வேண்டும். இதுவும் தெளிவாய் இருப்பது நலம். இல்லாவிட்டால் விலாசதாரருக்கு இன்னார் எழுதியது என்பதே புலப்படாது போகலாம்.

கடிதத்தை இவ்வாறு ஒழுங்காய் எழுதி முடித்த பின்பு, உறையிலிட்டு ஒட்டி, மேலே விலாசததை எழுதவேண்டும். இவ்விலாசமும் மிகத் தெளிவாய் இருக்கவேண்டியது அவசியம். முதல்வரியில் விலாசதாரர் பெயரும், அடுத்தவரியில் கதவு இலக்கமும் தெருப்பெயரும், அதன் கீழ் ஊரின் பெயரும், அதன் கீழ்த் தபாலாபீசின் பெயரும் எழுதப்படுவது முறை. அன்னிய தேசத்துக்குச் செல்வதற்குரிய கடிதமானல், மேல்விலாசத்தின் அடியில் அத்தேசத்தின் பெயர் இருக்கவேண்டும் விலாசம் வரையும் பக்கத்திலேயே, இடதுபுறக் கீழ் மூலையில், அனுப்புகிறவர் பெயரும் விலாசமும் குறிப்பது நல்லது. ஏனென்றல், ஏதாவது ஒரு காரணம்பற்றிக் கடிதம் விலாசதாரருக்குச் சேராவிட்டால், அனுப்பினவருக்கே அது திரும்பிவந்து சேருவதற்கு இம்முறை அனுகூலமாயிருக்கும்.

அருஞ்சொற்கள்:—வரைதல், மூலமாய், தெளிவாய், விசாரணை, ஆசி, கையொப்பம், புலப்படாது, அநுகூலம்.



## 18. சீனக்கடை

நீங்கள் எப்போதாவது சீனக்கடையைப் பார்த்திருக்கிறீர்களா? அங்கே என்னென்ன சாமான்கள் விற்கப்படுகின்றன? படத்தைப் பா

ருங்கள். அனேக பீங்கான் சாமான்கள், கண்ணு டிச் சாமான்கள் முதலியவை அழகாய் வைக்கப் பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் மண்ணுல் செய்யப்பட்டவை யாகும். இதைக் கேட்க உங்க ளுக்கு ஆச்சரியமாயிருக்கும். இவைகளுக்கு என் சீனு சாமான்கள் என்று பெயர் வந்தது தெரியுமா? முதன் முதல் சீனர்களே இவ்விதமான சாமான் களைச் செய்யத் தொடங்கினர். அதனுல்தான் இச்சாமான்களுக்கு இப்பெயர் வந்தது.




சீனுக்கடை.

நம் வீடுகளில் வழங்கும் சட்டிபானைகளை நீங் கள் பார்த்திருப்பீர்கள். அவைகள் மண்ணுல் செய்யப்பட்டவை என்பது உங்களுக்குத் தெரி

யும். நமது நாட்டினர் இவ்வித மட்கலங்களை வெகுகாலத்துக்கு முன்பிருந்தே உபயோகித்து வந்திருக்கிறார்கள். இப்பாத்திரங்களைப் போலப் பீங்கான் பாத்திரங்களும் மண்ணாற் செய்யப்பட்டவையே. இக்கடையில் ஜாடிகள், கோப்பைகள், தட்டுகள் முதலியவை இருப்பதைப் பாருங்கள்.

மண்ணில் பலவகை உண்டு. சில, வர்ணத்திலும், சில, குணத்திலும் மாறுபட்டிருக்கும். இவ்வித பீங்கான் பாத்திரங்கள் செய்வோர் அவற்றிற்குத் தகுந்த மண்ணைத் தேடிக்கொண்டுவந்து, சுத்தம் பண்ணி, தமக்கு வேண்டிய வடிவமுடைய பாத்திரங்கள் செய்வார்கள். இவ்வித மட்பாத்திரங்களில் தண்ணீர் விட்டால், ஊறிக் கசியும். அப்படிக் கசியாதிருப்பதற்காக அப்பாத்திரங்களின் மீது உப்பு, துத்தநாகம் கலந்த ஒரு திராவகம் முதலியவற்றைப் பூசிச் சூளையில் இடுவார்கள். பின்பு கண்ணாடித் துண்டுகளை உடைத்து உருக்கி, அந்தத் திராவகத்தால் பாத்திரத்தின்மேல் மெல்லிய பூச்சு இரண்டாவது தடவை பூசுவார்கள். அதனால்தான் அவ்வளவு பளபளப்பு அவற்றிற்கு ஏற்படுகிறது.

இவ்வாறு வேலைதீர்ந்த பாத்திரமொன்றை உடைத்துப் பார்த்தால், அதன்மேல் அவ்வித பூச்சுகள் கொடுக்கப்பட்டிருப்பதை அறியலாம். கடைசியில் அப்பாத்திரங்களின்மேல் பலவித வர்ணங்களைப் பூசி, பூங்கொடி முதலிய சித்திரங்களையும் வரைவார்கள்.

நீங்கள் செங்கல், ஓடு முதலியவைகளைப் பார்த்திருக்கலாம். இவைகளும் மண்ணாற் செய்

யப்பட்டவைகளே. இவைகளைச் செய்வோர் களிமண்ணைப் பிசைந்து பக்குவப்படுத்தி, அச்சி விட்டு உலர்த்திச் சூளையிற் சுடுவார்கள். தென் இந்தியாவின் மேற்குக் கரையில் உள்ள கள்ளிக் கோட்டை முதலிய விடங்களில் ஒருவித ஓடு செய்யப்படுகிறது. அங்குக்கிடைக்கும் மண் அதற்கு ஏற்றதாக இருக்கிறது. அந்த ஓடுகள் பள பளப்பாயும் கெட்டியாயுமிருக்கும்.

இந்தக் கடையில் கண்ணுடிச் சாமான்கள் மிகுதியாய் வைக்கப்பட்டிருக்கின்றன, பார்த்தீர் களா? என்னென்ன சாமான்கள் இருக்கின்றன? சிம்னிகள், டம்ளர்கள், கோப்பைகள், லஸ்தர்கள் முதலியவை இருப்பதைப் பாருங்கள். இவை கள் எவ்வளவு அழகாய் இருக்கின்றன! இவைக ளும் சிறிது மணல் கலந்த மண்ணுல் செய்யப்பட் டவைகளே. இவைகளைச் செய்வோர், தகுந்த மண்ணைத் தேர்ந்தெடுத்து, ஒருவகை உப்பு, மருந்து முதலியவற்றை அதனுடன் சேர்த்துக் காய்ச்சி அழுக்கெடுத்துச் சுத்தப்படுத்துவார்கள். இவ்வாறு சுத்தப்படுத்தப்பட்டதைத் திருப்பவும் உருக்கித் திரவரூபமாக்கி, எந்தெந்த உருவமாகச் செய்யவேண்டுமோ அததற்குரிய அச்சுகளில் ஊற்றுவார்கள். திரவம் உலர்ந்ததும் உருவங்கள் கெட்டியாகிவிடும்.

கண்ணுடிப் பலகைகள், பில்லைகள் முதலியன எவ்வாறு செய்யப்படுகின்றன என்று தெரியுமா? முன் சொல்லியபடி சுத்தமடைந்த பின், திரவ ரூபமாய் உருக்கப்பட்ட மண்ணைக் கீழே ஊற்றி, அதன்மேல் நீராவி நிறைந்த பாரமான குழாய் களைப் புரட்டுவதனுல் சமமான பில்லைகள் ஏற்

படும். இவைகளை நாம் கூரைகளுக்கு உபயோ கிக்கலாம். இவ்வித பில்லைகள் செய்யப்படும் யந்திரசாலைகள் பூஸா என்னும் நகரத்திலிருக் கின்றன. நெடுங்காலத்துக்கு முன்பே நமது தேசத்தார் மண்ணைக்கொண்டு கண்ணாடிச் சாமான்கள் செய்துவந்தார்கள். இத்தொழிலை நாம் இன்னும் அபிவிருத்தி செய்யவேண்டும்.

சில நோய்களைத் தீர்க்கும் குணம் களிமண் ணுக்குண்டு என்பர் சிலர். மண்பாத்திரங்களில் சமைக்கும் உணவே உடல் நலத்திற்குப் பெரிதும் ஒத்ததாம். கொடிய வேகமுள்ள தமிழ்முறை மருந்துகளுக்குப் பத்தியம் வைக்கையில், புது மட் பாண்டத்திலேயே உணவைச் சமைக்கவேண்டும் என்றும் விதிப்பதுண்டு. இப்போது நாகரிகம் மிகுந்து விளங்கும் பிரான்ஸ்தேசத்தில் பலர் களி மண்ணைத் தேகத்தில் பூசிக்கொண்டு, அது உலர்ந்த பிறகு, சவர்க்காரம் முதலியன உபயோ கிக்காமல் ஸ்நானம் செய்கிறார்கள். இதனால் அநேக நன்மைகள் உண்டாகின்றனவாம்.

அருஞ்சொற்கள்:—வழங்கும், சூளை, பூச்சு, வேலைதீர்ந்த, திரவரூபம், யந்திரசாலை, பெரிதும், விதிப்பது.



## 19. நாம் படிக்கும் புத்தகம்

பிள்ளைகளே, நீங்கள் கையில் வைத்திருக்கும் புத்தகத்தைக் கவனியுங்கள். அது எப்படிச் செய் யப்படுகின்றதென்பது உங்களுக்குத் தெரியுமா? ஒரு நூலுக்கென்று எழுதியதைக் காகிதத் தாள் களின்மீது அச்சிட்டு, அத்தாள்களை யெல்லாம்

ஒன்றுசேர்த்து நன்ருய்த் தைத்துக் கட்டினல் புத்தகமாகும்.

ஆதிகாலத்தில் நமது தேசத்தில் காகிதமாவது அச்சியந்திரமாவது கிடையாது. அப்போது நம் முன்னேர்கள் தமக்குத் தெரிந்ததைப் புத்தகத்தின் உதவியின்றி, வாயினல் பிறர்க்குச் சொல்லிக் கொடுத்துவந்தார்கள். பிறகு, பனை ஓலையில் எழுத்தாணியால் எழுதிப் பிறர்க்கு உதவிவந்தார்கள். இவ்விதம் செய்வதும் எவ்வளவு கஷ்டம்! எவ்வளவு காலதாமதமும் பொருட்செலவுமாகும்! இப்பொழுதோ, அச்சிட்ட புத்தகங்கள் மிக எளிதாய்க் கிடைக்கின்றன.

புத்தகங்களால் நமக்கு என்ன பிரயோஜனம்? ஒருவர் மனத்தில் உதித்தவற்றை வாயால் பிறர்க்குச் சொல்லிக்கொடுக்கும்போது, நேரே கேட்பவர்க்குமட்டும் அது பிரயோஜனப்படுகிறது. சொல்லிக்கொடுப்பவரும் கேட்பவரும் மறைந்தால், அவ்விஷயமும் அவர்களோடு மறைந்து போய்விடும். அவ்விஷயம் புத்தக ரூபமாக வந்தால், எல்லாருக்கும் எக்காலத்திலும் பயன்படும் அல்லவா? ஆகவேதான் புத்தகங்கள் அச்சிடப்படுகின்றன.

புத்தகம் அச்சிடுதற்கு வேண்டிய காகிதமானது கந்தை, சணல், பருத்தி, மரத்தூள் முதலிய பொருள்களால் செய்யப்படுகிறது. காகிதம் செய்வோர், மேற்சொன்ன பொருள்களை முதலில் ஊறவைத்து, உட்புறமெல்லாம் கூரிய கத்திகள் பதித்த பெட்டிக்குள் இட்டு, அதைச் சுற்றுவார்கள். இதனல் அப்பொருள்கள் நைந்து, தண்ணீரிற் கரைந்து, பின்பு குழம்பாகிவிடும். அக்

குழம்பில் ஒருவகைச் சுண்ணும்பு கலந்து காய்ச்சி, அதிலுள்ள அழுக்கைப் போக்குவார்கள். அப்பால், இக்கஞ்சியில் ஏடு மட்டும் படிவதற்காக, தந்திக்கம்பியால் வெகு நெருக்கமாய்ப் பின்னிய ஓர் அச்சை அக்குழம்பில் தோய்த்து எடுப்பார்கள். பிறகு கீழே கம்பளத்தை விரித்து, கஞ்சி யேட்டை மெதுவாய் அதில் பரப்பி, அதன்மேல் மற்ருெரு கம்பளத்தை விரித்து இன்னொரு ஏட்டை அடுக்குவார்கள். இப்படி மேன்மேல் அடுக்கிப் பின்பு ஏடுகளைப் பளுவான இயந்திரத்தில்வைத்து அழுத்துவார்கள். பிறகு ஏடுகளை எடுத்து உலரவிடுவார்கள். எழுதுங் காகிதங்கள் பின்பு இருமுறை பிசினுள்ள தொட்டியில் நனைத்து அமுக்கப்படும். இவ்வாறு காகிதம் செய்யப்படுகின்றது. காகிதம் செய்வதற்கு உபயோகப்படும் பொருள்கள் எவ்வளவுக் கெவ்வளவு செம்மையாய் அரைக்கப்பெறுமோ, அவ்வளவுக் கவ்வளவு காகிதம் நன்ருய் இருக்கும். மேற்சொன்ன குழம்பினின்றும் எவ்வளவுக் கெவ்வளவு அழுக்கு நீக்கப்படுமோ, அவ்வளவுக் கவ்வளவு காகிதம் வெண்மை அடையும்.

அச்சியந்திரசாலைகளை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? முதன்முதல் அச்சடிக்கும் யந்திரத்தைக் கண்டுபிடித்தவர் காக்ஸ்டன் என்னும் ஆங்கிலேயராவர். அவருக்குப் பிறகு அச்சியந்திரங்கள் பலவிதத்திலும் சீர்திருத்த மடைந்திருக்கின்றன. அச்சடிப்பதற்கு வேண்டிய எழுத்துக்கள் ஈயம், துத்தநாகம் முதலிய உலோகங்களால் ஆனவை. அச்சடிப்போர் இவ்வெழுத்துக்களை நமக்கு வேண்டியவாறு கோத்து, புத்தகப் பக்கங்களாய் அமைவதற்கேற்ற முறையில் ஒழுங்கு